# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | முதல் | 4-30 | வரை | சுப்ரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப சர்வதரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவைகள் |
| 6-00 | ,, | 7-00 | ,, | தோமாலசேவை(ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலிவைகள் |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | சுப்ரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவை |
| 6-00 | ,, | 7-00 | , | தோமாலசேவை(ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை(ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8 00 | ,, | 9-30 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவுமணி முதலியவைகள் |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 10-00 | | ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | சுப்ரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவை |
| 6-00 | ,, | 7-00 | ,, | தோமாலசேவை(ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல்அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா, அலங்காரம், மணி முதலியவை, |
| 11-00 | ,, | 5-00 | மாலை | ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 5-30 | ,, | சுத்தி முதலியவை |
| 5-30 | ,, | 7-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் |
| 7-00 | ,, | 8-00 | ,, | இரவுகைங்கர்யம், இரவுமணி |
| 8-00 | ,, | 9-30 | ,, | பூலங்கி சேவை (ஆர்ஜிதம்) |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவை |
| | | 10-00 | | ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம் |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை (தனி)மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி, இரவுகைங்கர்யங்கள், இரவு மணி |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவை |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

**குறிப்பு:** விழாநாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சி களின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சிநிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.



सहायो जायते शीघ्रं यत्र गीता प्रवर्तते
यत्र गीताविचारश्च पठनं पाठनं श्रुतम् ।
तत्राहं निश्चितं पृथ्वि निवसामी सदैव हि ॥

ஸஹாயோ ஜாயதே சீக்ரம் யத்ர கீதா ப்ரவர்த்ததே |
யத்ர கீதாவிசாரஸ்ச படனம் பாடனம் ச்ருதம் ।
தத்ராஹம் நிஸ்சிதம் ப்ருத்வி நிவஸாமி ஸதைவ ஹி ॥

எங்கு கீதை வாசிக்கப்படுகிறதோ அங்கு சீக்கரம் சஹாயம் வருகிறது. எங்கு கீதை ஆராய்ச்சி செய்யப்படுகிறதோ, ஓதப்படுகிறதோ, புகட்டவும் கேட்கவும் செய்யப்படுகிறதோ, ஆங்கு (நிலமகளேகேள்), நான் நிச்சயமாக ஸதா வாசம் செய்கிறேன்.

—ஸ்ரீ கீதா மாஹாத்மியம்.




# ஸப்தகிரி




மலர்: 9 டிசம்பர் 1978 இதழ் 7

தனிப்பிரதி 50 காசு.

வருடச் சந்தா ரூ. 6

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.

தி. தி. தேவஸ்தானம்,

திருப்பதி.

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,

மேலாளர்,

தி. தி. தேவஸ்தான அச்சகம்,

திருப்பதி.

முழு விவரங்களுக்கு,

Marketing Officer,

Publication Section,

T. T. D. Press Compound,

TIRUPATI-517501.


---

தி. தி. தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவரும், 'ஸப்தகிரி'யின் சிறப்பாசிரியருமான திரு. பி வி. ஆர். கே. பிரஸாத் ஐ. ஏ. எஸ்., அவர்களுக்கு 'ஸப்தகிரி' தன்னுடைய மனமார்ந்த பாராட்டுகளைத் தெரிவித்துக்கொள் [illegible]

---

# உள்ளுறை

| | | பக்கம் |
|---|---|---|
| ஆசிரியர் உரை | ... | 3 |
| பொறுப்பாண்மைக்குழு முடிவுகள் | ... | 4 |
| தமிழ்ச் சடகோப முனிவரும் பகவான் இராமகிருஷ்ணரும் | ... | 5 |
| அடக்கத்தின் அவசியம் | ... | 7 |
| சுவேல பர்வதத்தில் ஸ்ரீ ராமர் | ... | 9 |
| திருச்செந்தூர் | ... | 13 |
| சக்திக் கனல் | ... | 15 |
| புதன் | ... | 17 |
| அபிராமி அருட்பா | ... | 18 |
| கீதை காட்டும் நல்வழி | ... | 19 |
| திருவேங்கடவனின் திருவருள் தேவி | ... | 20 |
| எண் கணித சோதிடமும் அதன் பலாபலன்களும் | ... | 25 |
| திருமலைவாசா துயிலெழாய்! | ... | 27 |
| அனுமன் கதை | ... | 29 |
| ஸ்ரீமத் வேதாந்ததேசிக மங்களாஸாஸநம் | ... | 34 |
| தில்லையில் நந்தனாரும் குலசேகரரும் | ... | 36 |
| செய்திச் சுருக்கம் | ... | 37 |
| உறவு சொல்ல ஒருவன் | ... | 38 |
| ராசி பலன் | ... | 39 |

அட்டைப் படம்: ஸ்ரீ அலர்மேல்மங்கைத் தாயார்-திருச்சானூர்.

# ஆசிரியர் உரை

இரு நாடுகளுக்கிடையே நிலவும் நட்பின் ஆழம், அவ்விரு நாடுகளுக்கிடையே நிலவும் அரசியல் பிரச்சனைகளைக் கொண்டே விளங்குகிறது. அந்நட்பு, அப்பிரச்சனைகளைப் பொறுத்து, மேலும் நெருங்கவோ அல்லது நொறுங்கவோ செய்கிறது. எனவே நாடுகளுக்கிடையே ஓர் ஒற்றுமை உணர்வோ, சகோதர மனப்பான்மையோ சிறந்து விளங்க வேண்டுமாயின், அந்நாடுகளின் கலாசாரக் கூறுகளின் அடிப்படையில் சில ஒற்றுமைகள் விளங்குதல் அவசியம். அப்படியே விளங்கினாலும், ஒரு நாட்டில் உள்ள பல பகுதி வாழ் மக்கள் தங்களுக்குரிய கலாசாரங்களைக் கொண்டு தங்களை இனம் பிரித்து வாழவும் செய்கின்றனர். அவ்வாறு இருக்கையில், பல பகுதி மக்கள் கூடிவாழும் சூழ்நிலை 90 சதவிதம் சாதகமாக திகழ்ந்தாலும், மீதி 10 சதவிதம் அவ்வப்போது ஒரு சோதனையாகவே இருந்துவருகிறது. இந்தியாவில் பல மொழி பேசும் மக்கள் மொழி வாரியாக தங்களுக்குரிய கலாசாரக் கூறுகளுடன் வாழ்ந்து வருகின்றனர். அவர்களை ஒரு குடையின்கீழ் அரவணைக்கும் பெருமை இந்து சமயத்திற்கேயாம். மற்றுமொரு காரணம் என்னவெனின், அச்சமயமே, அவர்களுடைய பல்வேறு வகையான கலாசாரங்களின் அடிப்படை உணர்வாக விளங்குவதுதான். ஆகவே பல்வேறு உணர்வுகளைக் கொண்டு விளங்கும் பலரை ஒருணர்வின்கீழ் ஒன்றிணைக்கச் செய்யும் ஆற்றல் ஒரு சமயத்திற்கே உரியது என்பது மறுக்க முடியா உண்மை

உலகெங்கும் சமயங்கள் பல வாழ்ந்திட்டாலும், அவை தங்களுக்குரிய பல சிறப்பு அம்சங்களைப் பெற்றிட்டாலும், அச்சமயங்களுக்கு இந்து சமயம் ஒரு வழிகாட்டியோ என்று ஐயுறும் அளவிற்கு அதன் பெருமை பார் புகழ் வண்ணம் திகழுகின்றது. இந்து சமயம் பிறந்து வளர்ந்த இப்பாரதத்தை, சில ஆண்டுகள் முன்பு வரை, பல்வேறு சமயத்தார் பல்வேறு காலங்களில் பலவாறு ஆண்டு வந்த போதும், இச்சமயம் அழியாது, திட்டத்திட்ட ஒளிர்விடும் வைரம் போன்று, பழமைக்கும் பழமையாய், புதுமைக்கும் புதுமையாய்ச் சீரிளமை கொண்டு விளங்குகிறது.

அத்தகு சிறப்புமிகு சமயத்தினை வாழ்க்கையாகக் கொண்டு திகழும் பாரத மண்ணோடு நட்பு கொண்டு விளங்கிய-விளங்கும் நாடுகள் எண்ணில. அவற்றில் இந்து சமயத்தின் மறுபதிப்பாகக் கொண்டு விளங்கும் புத்த மதத்தைத் தழுவிய கீழை நாடுகள் பல. மகா விஷ்ணுவின் அவதாரங்களுள் ஒன்றாகக் கருதப்படும் புத்த மகான் போதித்த அறக் கருத்துக்களைக் கொண்டு தோற்றுவிக்கப்பட்ட புத்த மதம் இந்து சமயத்தின் ஓர் அங்கமாகவே கருதப்படுகிறது. அத்தகு சமயம் நன்கு பரவியுள்ள இலங்கைக்கும், நம் பாரதத்திற்கும் உள்ள தொடர்பு–நட்பு சிறப்பிற்குரியது; பெருமைக்குரியது; எண்ணிப் பார்க்கத் தக்கது.

புராணக் காலத்தை எண்ணிப் பார்க்கின்றபோது, அன்றே இலங்கையையும் பாரதத்தையும் பல கதைப் பாத்திரங்களைக் கொண்டு இணைத்து 'ராம காதை' எனும் காவியத்தைப் படைத்திட்டார் வால்மீகி. சரித்திரப் புத்தகத்தின் பல ஏடுகளை சற்றுப் பின்னோக்கிப் புரட்டிப் பார்க்கின் அவை, தமிழ் மன்னர்கள் காலத்து இவ்விரு நாடுகளுக்கிடையே நிலவிய வணிகத் தொடர்பினை விளக்கிக் கூறும். மேலும் சற்று கூர்ந்து நோக்கினால், அன்றே அசோக சக்ரவர்த்தி தன் சகோதரனை மகேந்திரனையும், சகோதரியாகிய சங்கமித்திரையையும் இலங்கைக்கு அனுப்பி புத்த மதக்கொள்கைகளைப் பரப்பினான் என்ற செய்தி நன்கு தெரியவரும். இலங்கையின் சிங்களப் பெயர்களை ஆராய்ந்து பார்த்தால், அந்நாட்டில், நமது நாட்டின் சிறப்பு மொழியான ஸம்ஸ்கிருதத்தின் ஆதிக்கம் நன்கு தெரியவரும். ஆகவே ஒரு காலத்து நிலத்தால் இணைந்த இவ்விரு நாடுகள் காலப் போக்கில், கடல் கொண்டதால், இன்று நீரால் சூழப்பட்டுள்ள இலங்கைக்கும், இந்தியாவுக்கும் உள்ள தொடர்பு கலாசாரத்தாலும், சமயக் கூறுகளாலும் வணிகத் தொடர்பினாலும், மொழியாலும் புராணக் காலத்து முதல் இன்று வரை நிலவி வருகின்றது என்பது சிறப்புக்குரிய செய்தியாகும்.

இவ்வாறு பல வகைகளில் இவ்விரு நாடுகளுக்கும் உள்ள நெருக்கம் மேலும் இறுகும் வகையில், இலங்கை ஜனாதிபதி திரு. ஜெ. ஆர். ஜெயவர்த்தனே அவர்களின், பொதுவாக இந்திய வருகை குறிப்பாக திருமலை வருகை திகழ்ந்துள்ளது. அவ்வருகை ஒரு தனிப்பட்ட மனிதரின் வருகையாகக் கருதுவதைவிட, இலங்கை மக்களின் வருகையாகவே எண்ணப்படல் வேண்டும்.

இவ்விரு நாடுகளுக்கிடையே ஓர் ஒற்றுமையையும், ஓர் உள்ளார்ந்த உறவினையும் ஏற்படுத்தும் வகையில் பல்வேறு காலங்களில் பல மன்னர்களும், அரசாங்கங்களும் பங்கெடுத்து கொள்ள, அவ்வழியில் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானமும் செயல்பட்டு வருகின்றது என்பதை நினைத்துப் பார்க்கின், அது இனிக்கவே செய்யும். சமீப காலமாகவே, இலங்கையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் உதவியுடன் தவவெறிவிப்பு நிலையம் ஒன்று செயல்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன அண்மையில் அந்நாட்டிலுள்ள இந்துக்கோயில் ஒன்றினைக் கட்டுதற்கு தேவஸ்தானம் ரூ. 25,000 வழங்கியுள்ளது. மேலும் அந்நாட்டில் உள்ள ஸ்ரீ வெங்கடேஸ்வரா கோயிலில் பிரதிஷ்டை செய்து வழிபடுதற்காகக் கடவுளர்களின் திருவிக்ரகங்கள், திருமலைக்கு வருகை புரிந்த இலங்கை ஜனாதிபதியிடம் இலவசமாக வழங்கப்பட்டன. இவையாவும், நாடுகளுக்கிடையே அரசியல் பிரச்சனைகள் எவ்வளவு இருந்திட்டாலும், அவையாவும் சமய இயக்கத்தின் மூலம் தீர்க்கப்படலாம் எனும் கருத்தினை ஊக்கப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. சமயப் பொதுமை காண்பதும், சமய மறுமலர்ச்சியை ஏற்படுத்துவதுமே இவ்விருபதாம் நூற்றாண்டின் சிறப்பாகும். அதற்குச் சான்றாக, இன்று, பல மேலைநாடுகளில் இந்துக் கோயில்கள் பல கட்டப்பட்டு வருகின்றன. இந்து சமயத்தில் நம்பிக்கைக் கொண்ட பல கீழை நாட்டுத் தலைவர்கள் திருமலைக்கு வருகை புரிகின்றனர்.

இச்சமய மறுமலர்ச்சி மேலும் மலர்ந்திட தன்னாலியன்ற முயற்சிகளை, தொண்டினை திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டு, மக்களின் ஆன்ம நலனுக்காக மகத்தான தன் சேவையை புரிந்திட என்றென்றும் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளும். இதற்கு அவ்வேங்கடவனின் அருட்துணை என்றும் இருக்க வேண்டுகிறோம்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(5-10-78, 6-10-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:)

கேரள மாநிலத்தில் குருவாயூரில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்துடன் கூடிய கலா நிலையம் ஒன்றினைக் கட்ட குழு ரூ. 7 இலட்சம் ஒதுக்கியுள்ளது.

ஆந்திரமாநிலத்தில் நந்தியாலாவில் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுதற்காக ரூ. 7 இலட்சம் வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில், யாத்திரிகர்கள் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றிக் கொள்ளும் வகையில், ரூ. 10 இலட்சத்திற்கு மிகாமல் மூன்று புதிய திருமண மண்டபங்களைக்கட்டுதற்குக் குழு அனுமதி அளித்துள்ளது.

முன்பு கல்யாண கட்டா சங்கத்தாரின் பொறுப்பில் இருந்து, தற்போது தி. தி. தேவஸ்தானத்தின் நேரடி பொறுப்பின் கீழ் செயல்பட்டு வரும் திருப்பதியிலும் திருமலையிலும் உள்ள நான்கு மந்திரங்களில் பணிபுரியும் பூசாரிகளின் மாத ஊதியத்தினை ரூ. 120 லிருந்து ரூ. 200 ஆக உயர்த்த குழு ஒப்புதல் அளித்துள்ளது.

நாகாலாபுரத்தில் ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயிலுக்கு மற்றுமொரு புதிய 'பரிச்சாரகர்' எனும் பதவியை நிரந்தரமாக ஏற்படுத்த குழு அனுமதி அளித்துள்ளது.

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர்கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்கான டிக்கெட்டுகளை இரவு 9 மணியிலிருந்து அடுத்தநாள் காலை 8 மணி வரை விற்கும் பணியை ஆந்திரா பேங்கிற்கு (அந்நிறுவனம் கேட்டுக் கொண்டதன் பேரில்) ஒப்படைக்க குழு அனுமதி அளித்துள்ளது. இதற்காக பணிபுரியும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இரண்டு 'ஷெராப்' பதவிகளுக்கு ஊதியம் வழங்குவதை அவ்வங்கியே ஏற்கும்.

ஹைதராபாத்தில் காச்சிகூடாவில் ஸ்ரீ துல்ஜாபவன் தர்மசாலையினை சீர்படுத்தும் வகையில், அதற்கு ரூ. 50,000-ஐ நன்கொடையாக வழங்க குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலம் பிரகாசம் மாவட்டத்தில் மால கொண்டாவில் சத்திரம் ஒன்றினைக் கட்ட குழு ரூ. 50,000 ஒதுக்கியுள்ளது.

ஸ்ரீகாகுளம் மாவட்டத்தில் திம்மிடி ஜோலா கிராமத்தில் ராமமந்திரம் ஒன்றினைக் கட்டுதற்கு நன்கொடையாக ரூ. 10,000 வழங்க குழு ஒப்புதல் அளித்துள்ளது.

ஆந்திர மாநிலம் சித்தூர் நகரத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலாகேந்திரம் எனும் கலைஅரங்கு ஒன்றினைக் கட்டுதற்கு, அக்கட்டடத்திற்கு ஆகும் செலவில் 1/4 பங்கினை தேவஸ்தானம் ஏற்றுக் கொள்ளுவதென்று (அதாவது ரூ. 2.5 இலட்சத்திற்கு மிகாமல்) குழு முடிவு செய்துள்ளது.

ஆந்திர மாநிலத்தில் பல்வேறு இடங்களில் உள்ள பல கோயில்களைப் புதுப்பிக்கவும், சில இடங்களில் திருமண மண்டபங்கள் மற்றும் கோயில் கோபுரங்களைக் கட்டுதற்கும் குழு ரூ. 16,62,350 ஒதுக்கியுள்ளது.

இலங்கை நாட்டில் கொழும்புவில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயில் ஒன்றினைக் கட்டுதற்கு குழு ரூ. 25,000 ஒதுக்கியுள்ளது.

ஆந்திர மாநிலம் ஆதோனியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலா கேந்திரம் ஒன்றினை அமைக்க, அதற்காகும் செலவில் 1/4 பங்கினை அதாவது ரூ. 2,50,000 வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.



## சந்தாதாரர்களுக்கு...

31-1-79 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

43, 45, 47, 48, 104, 134, 135, 145, 167, 169, 223, 274, 342, 362, 425, 587, 596, 611, 622, 625, 629, 639, 681, 731, 795, 818, 945, 964, 969, 978, 985, 1000, 1001, 1011, 1017, 1028, 1029, 1038, 1043, 1049, 1058, 1075, 1149, 1555, 1597, 1599, 1606, 1608, 1610, 1613, 1614, 1619, 1625, 1626, 1629, 1634, 1635, 1636, 1637, 1644, 1645, 1646, 1653, 1655, 1660, 1665, 1666, 1669, 1670, 1675, 1679, 1685, 1686, 1688, 1693, 2196, 2343 முதல் 2348 வரை, 2350 முதல் 2358 வரை, 2360 முதல் 2388 வரை, 2390 முதல் 2403 வரை, 2405, 2406, 2407, 2408, 2410, 2412 முதல் 2466 வரை, 2468, 2469, 2471, 2472, 2504.

# தமிழ்ச் சடகோப முனிவரும்

உலகத்தை உய்விக்கப் பல்வேறு நாடுகளில் அவ்வப்போது பல பெரியோர்கள் தோன்றினர்; தம் வாழ் வாலும் வாக்காலும் மக்கட்கு நன்னெறி காட்டும் பணியைச் செய்து போந்துள்ளனர். சென்ற நூற்றுண்டில் வங்காள தேசத்தில் தோன்றித் தம் சீடர்களின் வாயிலாக உலகெங்கும் ஒரு புத்தியக்கம் தோற்றுவித்த பெரியவர் இராமகிருஷ்ண தேவராவர். அன்னுர் நெறியைப் பரப்பும் அமைப்புக்கள் இந்திய நாட்டில் மட்டுமின்றி உலகின் பல பாகங்களிலும் உள்ளன. அவை பல துறைகளில் ஒப்பற்ற பணியாற்றி வருவது சமய அறிஞர் யாவரும் அறிந்ததே. அதே போன்று ஏறக்குறைய 1100 ஆண்டுகட்கு முன் தமிழ் நாட்டில் தாமிரபரணி ஆற்றங்கரைப் பகுதியில் தோன்றித் தம் புதுமைத் தன்மையால் பின் வந்தாரையும் கவர்ந்த தமிழ் முனிவர், வேதம் தமிழ் செய்த வித்தகர் சடகோபர் ஆவர். இவர் தம் நூல்களில் நுழைந்து பயின்று வேதங்கட்கும் உபநிடதங்கட்கும் புது விளக்கம் தந்து சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் இராமாநுசரும் அவர் வழி வந்தவர்களும். சடகோபரை நம்மாழ்வார் என்று வைணவ உலகம் பாராட்டி வருகின்றது. இவர் தம் கொள்கைகள் இந்தியாவெங்கும் உள்ள வைணவ சமயத்தாரால் ஏற்றுக் கொள்ளப் பெற்று 'இராமாநுச தரிசனம்' என்ற பெயரில் வழங்குகின்றன. வங்காளத்திலும் இந்நெறி சார்ந்தவர் பலருண்டு. இராம கிருட்டினர் நெறியைப் பின்பற்றித் தொண்டாற்றும் சமய நற்பணி அமைப்புகள் தமிழ் நாட்டிலும் உண்டு. இவ்விரு பெரும் சமயச் சான்றேர் வாழ்வு வாக்கு இவற்றில் ஒற்றுமை பல. அவற்றைச் சுட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம்.

தெய்வத்தன்மை மிக்க பெரியவர் உலகில் பிறக்கின்றனர்; போற்றத்தக்க வாழ்வு வாழ்ந்து அருஞ்செயல் பல புரிந்து பலர்க்கும் வழி காட்டுகின்றனர். நூல்களால் இதனை நாம் அறிகின்றேம். என்றே தோன்றி மறைந்தவர் பற்றிச் சிலர்க்கு ஐயங்கள் தோன்றலாம். ஆனல் அவ்வாறு சந்தேகம் கொள்ள வேண்டுவதின்று; அருஞ்செயல் பல நடக்கக் கூடியனவே என்பதற்கு அண்மையில் வாழ்ந்த இராம கிருஷ்ணர் வாழ்வு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. அவரையும் அவர் தம் சீடர் விவேகானந்தரையும் சாரதா தேவியாரையும் நேரில் கண்டு அவர்களோடு பழகிப் பயன் பெற்ற பலர் சமீப காலம் வரை வாழ்ந்துள்ளனர். அவர்களது சொல்லும் அனுபவமும் மற்றவர்க்கு நம்பிக்கையை ஊட்டுவனவாகும். ஒன்பதாம் நூற்றுண்டில் சடகோபர் அருளிய பல கருத்துக்கள் இராம கிருஷ்ணர் வாழ்வில் நிகழ்ந்துள்ளதைக் காணுகையில் — வங்காள மொழியில் அன்னுர் கூறியுள்ள பேச்சில் அமைந்திருப்பதனைப் படிக்கையில்-ஒரு உண்மை தெளிவாகின்றது. அதாவது உண்மை ஒன்று; அதனை அறிஞர் வேறு வேறு மொழிகளில் தாம் உணர்ந்தவாறு செப்புகின்றனர் என்பதே அது.


டாக்டர். கு. தாமோதரன்,
தமிழ்த்துறைத் தலைவர்,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்.


**இராமகிருஷ்ணர் :**

வங்கநாட்டில் அந்தணர் குலத்தில் பிறந்தவர்; புரோகிதத் தொழில் புரிந்தவர்; காளிக் கோவிலில் அர்ச்சகராகப் பணி புரிந்தார். அவர் பள்ளிக் கல்வி படித்தவரல்லர்; பெயரளவில் சாரதா தேவியாரை மணந்து ஆன்மீகப் பெருவாழ்வு வாழ்ந்து பல சீடர்களைப் பயிற்றுவித்து வழிகாட்டியவர். ஒரு சமய நெறிமட்டுமன்றிப் பல சமய நெறிகளையும் பயின்று பழகி அவற்றில் வெற்றி பெற்றுச் சமரச நெறியை உலகுக்கு அழகுற விளக்கிய பெருமகனுர். மிகுதியும் யாத்திரை செய்தவரல்லர். பிறப்பால் வந்த சாதி தருமம் பாராட்டாத பெற்றியர். சாத்திர அறிவுமட்டும் கடவுட் காட்சிக்குப் போதியதன்று என்று உணர்த்தியவர்.

அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அன்னை பராசக்தியையே போற்றி வழிபட்டு வந்தவராளுலும் ஏழை எளியவர்பாலும் அன்புகாட்டி அவர் முன்னேற்றத்திற்காகவும் உழைக்க வேண்டுமென்று மக்கட்குக் காட்டியவர். சாரதா தேவியாரை மணந்து கொண்டதன் மூலம் பெண்மைக்கு இருக்கும் ஏற்றத்தினை உலகவர் அறியச் செய்த பெருமையர். அன்னுரை முற்ற அறிய வேண்டுமெனில் இராமகிருட்டினர், விவேகாநந்தர், சாரதா தேவியார் மூவரையும் ஒன்ருக நோக்குதல் வேண்டும்.

**சடகோபர் :**

தமிழ் நாட்டில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். பதினறு ஆண்டு காலம் பேசவும் ஏன் பாலருந்தவும் செய்யாது உலகியல்புக்கு மாறுன தன்மையில் தனித்து வாழ்ந்தவர். வேதம் உணர்ந்த வேதியரான மதுரகவி இவரை இவர்தம் 16-வது வயதில் கண்டபோது இவர்தம் மனப்பக்குவ நிலையை அறிந்து முதியவரான அவர் இவர்க்குச் சீடரானுர் என்பர். இவரும் பெரிதும் பயணம் செய்தவரல்லர்; பல கடவுளரும் இவரைக் காணவந்ததாகப் பரம்பரை வரலாறு சொல்லுகின்றது. திருமணம் முதலியனபற்றிப்

# பகவான் இராம கிருஷ்ணரும்

பேச்சில்லை. இவர் இயற்றியனவாக நான்கு நூல்கள் தமிழில் உள்ளன. அவை வேதக் கருத்துக்களின் சாரமாக உள்ளன என்பது அறிஞர் கருத்து. மாதரைப் பழியாமை, குல நலம் பாராட்டாமை, மக்கள் தொண்டு செய்தல், கல்வியின் பயன் கடவுளை உணர்தல் என்ற அறிவு, மதச் சமரச மனப்பான்மை, உலகினர் திருந்த உபதேசம் செய்தல் இன்னோரன்னவை இவர்தம் வாழ்வில் நாம் காணும் சிறப்புக்களாகும். இவர் தம் கொள்கைகளையும் தத்துவங்களையும் பின்பற்றிப் பின்னோர் பலர் தமிழ் நாட்டில் வாழ்ந்தனர், வாழ்கின்றனர் என்பது அறியத்தக்கது.

இவர் சிறந்த தெய்வப் புலவர் என்பதும் இவர் தம்மை முற்றிலும் அறிய வேண்டுமெனில் இவர்தம் கொள்கைகளை உலகறியச் செய்த இராமானுசரையும் சேர்த்தே நோக்க வேண்டுமென்பதும் அறிய வேண்டிய உண்மைகளாம். மேற்காட்டிய பகுதிகளில் இருபெரும் சான்றோர்களிடையே காணும் சில முக்கிய ஒற்றுமைகளையும் ஒருமைப்பாடுகளையும் மட்டும் நாம் காண்போம்.

**நூற்கல்வியின்மை :**

இராமகிருஷ்ணர் பள்ளிக் கல்வியைப் புறக்கணித்தார். சமஸ்கிருதம் வேத சாத்திரங்கள் இவற்றைக் கற்கவில்லை. அதனால் அவர் வாழ்வில் எவ்வித குறைவும் இல்லை. எல்லாக் கருத்துக்களையும் உண்மைகளையும் காளி அன்னையின்பால்-தேவியின் அருளால்-உணர்ந்தவர். சாத்திரக் கருத்துக்கள் மிகத்தெளிவாக இராமகிருஷ்ணரது உபதேசங்களில் விளக்கம் பெறுகின்றன என்பதனை யாவரும் ஒத்துக் கொள்கின்றனர்.

அதே போக்கினைத்தான் சடகோபர் வாழ்வும் வரலாறும் நமக்கு உணர்த்துகின்றன. சடகோபர் வடமொழி படித்ததாகவோ அல்லது நூற்கல்வி பெற்றதாகவோ வரலாறு இல்லை. ஆனால் வேத உபநிடதக் கருத்துக்கள் அவர் தம் பாடல்களில் செறிந்துள்ளன. அவர் இறைவன் அருளால் அவற்றை உணர்ந்தவராதல் கூடும் என்பதனை எவ்வாறு மறுக்க முடியும்? சில இடங்களில் சில சொல், தொடர் ஒப்புமைகள், சடகோபர் நூல்களைப் படித்தே இருத்தல் வேண்டுமென்ற எண்ணத்தை உண்டாக்குகின்றன. ஆனால் இராமகிருஷ்ணரது வரலாற்றை நினைத்துப் பார்த்தால் அவ்வொற்றுமைகள் இறையருளால் ஏன் ஏற்பட்டிருத்தல் கூடாது என்று ஐயம் எழுகின்றது.

**கல்வியின் பயன் :**

கல்வியின் பயன் கடவுளை அறிவது தான்; அதற்குப் பயன்படாத கல்வி கல்வியாகாது. அது பண்பை இழக்கச் செய்யும். மேலும் சாத்திர அறிவு மட்டும் கூடப் போதியதன்று என்பது இராமகிருஷ்ணர் அறிவுரை. பஞ்சாங்கம் மழை பெய்தலைப் பற்றிக் கூறும். ஆனால் அதனைப் பிழிந்தால் ஒரு துளி தண்ணீரும் வராது; அதுபோலவே சாத்திர அறிவினால்மட்டும் பயனில்லை. இறை அனுபவமே வேண்டத்தக்கது என்று பகவான் இராமகிருஷ்ணர் கூறுகின்றார். அதே போன்று சடகோபரும் இறைவன் ஆவேசித்த ஒரு பெண்ணின் பேச்சைப் பாடுகையில் அவள் 'கல்வியின் சாரம் ஆவேனும் யானே என்னும்' என்று அமைப்பது அறிந்து இன்புறத் தக்கதாகும்.

**மாதரைப் பழியாமை :**

இரு பெரியவர்களும் புலனடக்கம் பெற்ற ஐந்தவித்த ஆற்றலர்களாகவே விளங்கினர். காமன் இருக்கு மிடத்து இராமனுக்கு இடமில்லை என்பர் இராமகிருஷ்ணர். சடகோபரும்

'நீர் நுமது என்றிவை வேர் முதல்
மாய்த்து இறை சேர்மின்
அதற்கு நேர் நிறை இல்லை' (1-2-3)

என்றே பாடுகின்றார். மாதரைப் பரமஹம்சர் எங்கும் பழித்துப் பேசவில்லை. அவர், தம் துணைவியுடன் வாழ்ந்தாலும் இருவரும் ஆன்மீக வாழ்வில் சிறப்புற்றுத் திகழ்ந்ததாகவே வரலாறு தெரிவிக்கின்றது. பெண்டிர்க்கு அறிவுரை கூறுகையில் ஆண் ஆசை கூடாது என்று அவர் பகர்ந்தார் என்பர். அதற்கு மேலும் ஒரு படி சென்று தம் மனைவியையே கடவுளாகக் கருதி அவர் வழிபட்டதாக அவர் வரலாறு காட்டுகின்றது. கணவனைக் கடவுளாகக் கொள்க என்பது பழைய பண்பாடு—மரபு. அது புது வடிவம் பெறுதலைப் பரமஹம்சர் வாழ்வில் நாம் பார்க்கிறோம்.

எல்லாம் கண்ணனே என்று வாழ்ந்த சடகோபரும் மாதரை எங்கும் பழித்துக் கூறவில்லை. தாம் அம்மாய வலையில் வீழ்ந்து அல்லற்பட்டதாகவும் பாடவில்லை. ஏன்? தாமே ஒரு பெண்ணாகி நின்று இறைவனை அடைந்ததாகப்

(33-ம் பக்கம் பார்க்க)

யானையும் காளையும்-வேலூர் கோட்டை—திரு. S. V. K. S. ஸ்ரீநிவாசன், திருப்பதி.



# அடக்கத்தின் அவசியம்

'ஆலம்'
திருப்பதி.

(அறிஞர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல். அந்தணரான பாலாகி நிறையப் படித்தவர்: ஆனுல், முழு அறிவு பெருதவர். ஆயினும், வீண் தற்பெருமை மிகுந்தவர். அஜாதசத்ரு அரசகுலத்தைச் சேர்ந்தவர்: எனினும் நிறையறிவு பெற்றவர். விஞ்ஞானம் என்னும் மெய்யறிவுத் திறனே அனைத்தையும் ஆளுகின்றது என்னும் உண்மையை பாலாகி அஜாதசத்ருவிட மிருந்து அறிந்து கொள்கிருர். அடக்கத்தின் அவசியத்தைஉள்ளோட்டமாக விளக்கும் அருமையான உபநிஷதக் கதை, பாலாகியின் கதை).

கங்கைக் கரையின்மீது அமைந்துள்ள காசி, அறிஞர் பெருமக்கள் நிறைந்த நகரமாக விளங்கிற்று. அங்கு பாலாகி என்னும் இளம் அந்தணர் ஒருவர் இருந்தார். நிறையப் படித்தவர்! சொற்பொழிவு நிகழ்த்துவதில் வல்லவர். ஆனுல், வீண் தற்பெருமை கொண்டவர். அனைத்தையும் கற்றறிந்து கொண்டு விட்டதாக எண்ணி இறுமாப்பு அடைந்தார்.

காசி அரச குடும்ப இளவலான அஜாத சத்ருவினிடம் ஏதோ சிறிதளவு பணம் பெறலாம் என்னும் ஆசையுடன் அரண்மனை சென்ருர். அஜாதசத்ரு அவரைப் பணிவுடன் வரவேற்று உபசரித்தார். பாலாகி அவரைப் பார்த்து ''பரம்பொருளாகிய பிரம்மத்தைப்பற்றி உமக்கு எடுத்துச் சொல்கிறேன்'' என்று கூறினர். ''நல்லது உமக்கு ஆயிரம் பசுக்கள் தருகிறேன். அறிவிற் சிறந்த ஜனக மன்னரிடமே அறிஞர்கள் செல்கின்றனர். அவரைப்போல் என்னுல் கொடுக்க முடியாவிட்டாலும், என்னுல் இயன்ற இந்தச் சிறு காணிக்கையை உமக்கு வழங்குகிறேன்'' என்ருர் அஜாதசத்ரு. அதைக் கேட்ட பாலாகி மேலும் செருக்கடைந்து பிரம்மத்தைப் பற்றிய விளக்கத்தைத் துவக்கினர். ஆனுல், அவர் பேசத் தொடங்கியவுடனேயே அவரது அறிவு ஆழமற்றது என்பது அஜாதசத்ருவிற்குப் புலப்பட்டு விட்டது. எனினும், அவர் சொல்வதைப் பொறுமையுடன் கேட்டார்.

''அதோ சூரியனிடம் கரந்துள்ள பொருளே பிரம்மம். அதையே பரம் பொருளாக எண்ணி தியானிக்கிறேன்' என்ருர் பாலாகி. அஜாத சத்ருவோ ''எல்லா உயிர்களையும் விடச் சிறந்தவராக அதைக் கருதலாமே தவிர, அதையே இறுதி மெய்ப் பொருளாகக் கொள்ளமுடியாது. சூரியனை அத்தகையவராக நினைத்து வழிபடுபவர் அனைத்தையும்விடச் சிறந்தவராக, எல்லோருக்கும் தலைவராக அல்லது அரசராக ஆகின்ருர்'' என்று பாலாகி கூறியதை மறுத்தார்.

சற்றே துணுக்குற்ற பாலாகி ''அதோ சந்திரனிடம் கரந்துறையும் பொருளே பிரம்மம். அதையே பரம் பொருளாக எண்ணி தியானிக்கிறேன்' என்று மொழிந்தார். ''அவ்வாறு சொல்லாதீர். ஏன் எனில், நான் சந்திரனை வெண்கலையுடன் கூடிய ஸோம ராஜனுகக் கருதி வழிபடுகிறேன். சந்திரனை அவ்வாறு நினைத்து வழிபடுபவர்க்கு ஸோமரசம் பிரதான வேள்விகளிலும் துணை வேள்விகளிலும் வழங்கப்படுகிறது. அவருடைய உணவு குறைவதில்லை'' என்ருர் அஜாதசத்ரு.

''மின்னலில் உள்ளவரே பிரம்மம். அவரையே நான் பரம்பொருளாக எண்ணி தியானிக்கிறேன்'' என்ருர் பாலாகி. அதற்கு அஜாதசத்ரு ''நான் அவரை தேசுடையவராகத் தியானிக்கிறேன். அவரை அத்தகையவராக நினைத்து வழிபடுபவரும் அவருடைய வழித்தோன்றல்களும் தேசுடன் விளங்குகிருர்கள்'' என்று சொன்னர்.

''ஆகாயம் எனப்படும் விசும்பில் இருப்பவரே பிரம்மம். அவரையே நான் பரம்பொருளாக எண்ணி தியானிக்கிறேன்'' என்று பாலாகி கூறியவுடன், அஜாதசத்ரு ''அவ்வாறு சொல்லவேண்டாம். ஏன் எனில், அவரை நான் நிறைவுள்ளவராக, அசையாதவராக தியானிக்கிறேன். அவரை அத்தகையவராக எண்ணி வழிபடுபவர், மக்கள்பேறும் கால் நடைச் செல்வமும் மிகுந்து விளங்குகின்றனர். அவை இவ்வுலகிலிருந்து நீங்குவதில்லை. அவருடைய வம்சம் தொடர்ந்து இருந்து வருகிறது,'' என்று உறுதியாகச் சொன்னர்.

பாலாகி தொடர்ந்து ''காற்று அல்லது வளி என்பதில் உள்ளவரே பிரம்மம். அவரையே பரம்பொருளாக எண்ணி நான் தியானிக்கிறேன்'' என்று கூறினர். அதற்கும் அஜாத சத்ரு ''அவரைத் தலைவராக, எதிர்க்க முடியாததும் தோற்கடிக்க இயலாதது மான போர்ப்படையாக எண்ணி வழி படுகிறேன். அவரை அத்தகையவராக எண்ணி வணங்குபவர் வெற்றி கொள்ளமுடியாதவராகவும் எதிரிகளை வெல்லுபவராகவும் ஆகிருர்'' என்று மறுமொழி சொன்னர்.

''தீயினில் உள்ளவரே பிரம்மம். அவரையே பரம்பொருளாக எண்ணி நான் தியானிக்கிறேன்'' என்ருர் பாலாகி. ''அவரைப் பொறுமையுள்ளவராக எண்ணி வணங்குகிறேன். அவரை அத்தகையவராகக் கருதி தியானிப்பவரும் பொறுமையுடையவராக, கோபத்தை அடக்கி ஆள்பவராக ஆகிருர். அவரது குழந்தைகளும் பொறுமையுடையவராக ஆகின்றனர்'' என்ருர் அஜாத சத்ரு.

''நீரில் உள்ளதே பரம்பொருள்: அதையே பிரம்மமாக எண்ணி நான் தியானிக்கிறேன்'' என்ருர் பாலாகி. ''நான் அதை பிரதிபிம்பமாகத் தியானிக்கிறேன். அங்ஙனம் அதை எண்ணி வழிபடுபவருக்கு அதைப்

போன்றதே கிடைக்கிறது. அவரிடமிருந்து அதைப் போன்றவரே பிறக்கிருர்'' என்று அடக்கத்துடன் கூறினுர் அஜாத சத்ரு.

''கண்ணுடியில் உள்ளவரே பிரம்மம் அதையே பரம்பொருளாக எண்ணி நான் தியானிக்கிறேன்'' என்று பாலாகி மேலும் கூறியவுடன், அஜாத சத்ரு ''பிரகாசிக்கும் பொருளாக அதைக் கருதி நான் வணங்குகிறேன். அதை அவ்வாறு கருதி வழிபடுபவரும் பிரகாசத்துடன் விளங்குகிருர். அவரது வம்சத்தினரும் பிரகாசத்துடன் விளங்குகின்றனர்'' என்று உரைத்தார்.

அடுத்து, பாலாகி கூறியதாவது: ''ஒருவர் நடக்கும்போது அவரைத் தொடரும் ஒலியில் இருப்பதே பிரம்மம். அதையே பரம்பொருளாக எண்ணி நான் தியானிக்கிறேன்'' இதற்கு அஜாதசத்ருவின் மறுமொழி: ''ஒலியிலுள்ளதை வாழ்வாக அல்லது உயிராக எண்ணி நான் வணங்குகிறேன். அதை அங்ஙனம் எண்ணி வழிபடுபவருக்கு முழு ஆயுள் கிடைக்கிறது. உரிய காலத்திற்கு முன்னர் அவர் இவ்வுலகைவிட்டுச் செல்வதில்லை.''

திக்குகளில் உள்ள புருஷரே பிரம்மம், அவரையே பரம்பொருளாக நினைத்து வணங்குவதாக பாலாகி பகர்ந்தார். அதை மறுத்து, ''திக்புருஷர் நம்மை விட்டு அகலாதவரே என்றும் அவரை அத்தகையவராக எண்ணி வழிபடுபவர் தனிமையில் இருப்பதில்லை'' என்ருர் அஜாதசத்ரு.

நிழலாக உள்ள பொருளேயே பிரம்மமாக எண்ணித் தாம் வணங்குவதாகப் பாலாகி சொன்னவுடன், அஜாதசத்ரு ''அதை மரணமாக எண்ணி தியானிக்கிறேன். அதை அவ்வாறு கருதி வழிபடுபவர்க்கு முழு ஆயுள் கிட்டுகிறது. உரிய காலத்திற்குமுன் அவரை மரணம் அணுகுவதில்லை. அவ்வளவுதான்'' என்ருர்.

இங்ஙனம் ஒவ்வொரு தடவையும் தம்முடைய கருத்துக்கு மறுப்புத் தெரிவித்த அஜாத சத்ருவிடம் ''நம்முள்ளே இருக்கும் புருஷரே பிரம்மம்'' என்று சோர்வுற்ற மனத்தினுய்க் கூறினுர் பாலாகி. ''தன்னுள்ளே இருக்கும் புருஷரையே பரம்பொருளாக எண்ணும் மனிதன் தன் மதிப்புள்ளவனுக ஆகின்ருன். எனவே, தாங்கள் கூறியது பொருந்தாது'' என்று இதற்கும் அஜாதசத்ரு மறுப்புக் கூறினர். அதைக் கேட்ட பாலாகி ஒன்றும் மொழியாது வாளா விருந்தார். ''அவ்வளவு தானு?'' என்னும் அஜாதசத்ருவின் கேள்விக்குப் பாலாகி ''அவ்வளவுதான் நான் அறிந்தது'' என்று விடை பகர்ந்தார். ''தங்களுக்குத் தெரிந்ததைக் கொண்டு பிரம்மத்தின் உண்மை இயல்பை அறிய முடியாது'' என்ருர் அஜாதசத்ரு. ''அவ்வாருயின் என்னைத் தங்கள் மாணவனுக ஏற்றுக் கொண்டு பிரம்மத்தைப்பற்றி எனக்குக் கற்பிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்'' என்று பணிவுடன் வேண்டினுர் பாலாகி.

''ஆன்மவியல் அறிவைப் பெறுவதற்காக அந்தணன் க்ஷத்திரியனை நாடுவது வழக்கத்திற்கு மாருனதாகும். பரவாயில்லை. அதைப்பற்றி நான் அறிந்திருப்பதை உமக்குச் சொல்லுகிறேன்'' எனக்கூறி, அஜாத சத்ரு பாலாகியின் கையைப் பிடித்துக் கொண்டு ஆழ்ந்த துயிலில் இருந்த மனிதன் ஒருவரிடம் அவரை அழைத்துச் சென்ருர். ''வெள்ளைக்கலை அணிந்த, பொலிவுடன் கூடிய ஏ, ஸோமராஜனே, எழுந்திரு'' என்று அஜாதசத்ரு உரக்கச் சொன்னுர். ஆனுல், அவன் எழுந்திருக்கவில்லை. பின்னர், அவனைக் கையினுல் அசைத்தார். அவன் உடனே விழித்துக் கொண்டான்.

அஜாத சத்ரு பாலாகியை நோக்கி ''அறிவுணர்வுடன் கூடிய இம்மனிதன் தூங்கும்போதுஅவ்வறிவுணர்வு எங்கே இருந்தது? அது எங்கிருந்து மீண்டும் திரும்பி வந்தது? தூங்கியது எது? பிறகு செயலுடன் விளங்கியது எது? என்றுகேட்டார். பாலாகிக்கு இவைப் பற்றி எதுவுமே தெரியாது.

அஜாதசத்ரு இவை குறித்துப் பாலாகிக்கு விளக்கமாக எடுத்துரைத்தார்: ''ஸோமராஜனிடமுள்ள விஞ்ஞானம் எனப்படும் அறிவுணர்வு அவன் தூங்கும்போது தாற்காலிகமாக உறங்கியது அல்லது செயலற்றிருந்தது. பொறி உணர்வுகள் அனைத்தையும் தன்னுள் இழுத்துக்கொண்டு அது இதயத்தில் ஓய்வுபெற்று இருந்தது. அவனுடைய உடலோ செயலுடன் கூடியதாக அதாவது, உயிருடன் இருந்தது. உணர்வுச் சக்திகள் யாவும் ஒடுங்கியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அந்நிலையில் பேச்சு, பார்வை, கேட்டல், மனமும் கூட ஒடுங்கி விடுகின்றன.

இந்த அறிவுணர்வு கனவுலகில் திரியும் போது இந்தப் பொறியுணர்வு ஆற்றல்கள் யாவும் அதனுடனேயே இருக்கின்றன. கனவில் இந்த அறிவுணர்வு அரசன், அந்தணன், போன்ற உயர்ந்த அல்லது தாழ்ந்த நிலையிலுள்ள வெவ்வேறு பாத்திரங்களை ஏற்கிறது. எனினும், அரசனேடு செல்

(36-ம் பக்கம் பார்க்க)



கூரத்தாழ்வார்–திருப்பதி.
திரு. S. V. K. S. ஸ்ரீநிவாசன்–திருப்பதி.

# சுவேல பர்வதத்தில் ஸ்ரீ ராமர்

சுவேல பர்வதம்!

அன்றொரு நாள் சுவேல பர்வதத்தின் மீது ஏறித்தான் ஹனுமான் இலங்கையை முதன் முதலில் கண்டார். காலன் இதை ஆண்டு வந்ததாகக் கூறுவர். காலனுக்கு அஞ்சி எவரும் இதன் பக்கம் செல்வதும் இல்லை. ஹனுமான் ஒருவர் தாம் அச்சமின்றி இதன்மீது ஏறியவர். ராமகாரியமாகச் செல்லும் தமக்கு வரும் இடர்களை அந்த ராமனின் க்ருபை விலக்கி விடும் என்பதில் அவருக்குத் திட நம்பிக்கை. அது வீணாகவில்லை. ஹனுமார் காலனை வென்று அவனை யமபுரிக்குத் திருப்பி யனுப்பினார். அதே சுவேல பர்வதத்தின் மீதுதான் இப்போது ஸ்ரீராமர் வானர சேனை சகிதம் வந்து இறங்கியிருந்தார்.

சுவேல பர்வதம் த்ரிகூட சிகரங்களில் ஒன்றாகும். மற்றொன்றில் இலங்கை மாநகரம் அமைந்திருந்தது; மூன்றாவதில் அசோகவனமிருந்தது.

சுவேலபர்வதத்தில் ஒரு நாள்மாலைப் போதில் ஓர் அழகான காட்சி! கோஸ்வாமி துளஸீதாஸர் சொற்களில் அக்காட்சி வருமாறு:

ப்ரபு க்ருத ஸீஸ கபீஸ உசங்கா |
பரம தஹின திஸி சாப நிஷங்கா ||
துஹுன் கர கமல ஸுதாரத பாணு |
கஹ லங்கேஸ மந்த்ர லகி காணு ||
பட பாகீ அங்கத ஹனுமானு |
சரன கமல சாபத விதி நானு ||
ப்ரபு பாசேன் லசிமன் வீராஸன் |
கடி நிஷங்க் கர் பான் ஸராஸன் ||
ஏஹி விதி க்ருபா ரூப குன தாம ராமு ஆஸீன் |
தன்ய தே நர் ஏஹின் த்யான் ஜே ரஹத ஸதா லய லீன் ||

ஸ்ரீராமர் சுக்ரீவனின் மடியில் தலை வைத்து சயனித்திருக்கிறார். அவருக்கு இடப்புறம் வில்லும் வலப்புறம் அம்பறாத் தூணியும் உள்ளன. ஸ்ரீராமர் ஒரு அம்பை எடுத்து அதை விரல்களால் நெருடிச் சீர் செய்கிறார். விபீஷணர் பகவானின் காதருகே அமர்ந்து ஏதோ சொல்லிக் கொண்டிருக்கிறார். மஹா பாக்யவான்களான ஹனுமானும் அங்கதனும் ஸ்ரீராமரின் திருவடிகளை வருடும் பணியில் ஈடுபட்டுள்ளனர். ஸ்ரீலக்ஷ்மணர் வில்லேந்திய கையராய் ப்ரபுவின் பின்னே நிற்கிறார். க்ருபா, ரூப, குண தாமனான ஸ்ரீ ராமனின் இந்த எழிற்கோலத்தை எப்போதும் த்யானிப்பவர்கள் பாக்யவான்கள்.

ஸ்ரீராமர் சுக்ரீவன் மடியில் தலை வைத்துப் படுத்தவாறே எதிரே நோக்குகிறார். அவர் பார்வை கிழக்கில் அப்போதுதான் உதித்து வரும் சந்திரன் மீது படுகிறது. கூடியிருப்பவர்களை ஒரு தரம் நோக்குகிறார். லக்ஷ்மணர் இதற்குள் சற்றுத் தொலைவில் சென்று உலாவியவாறே காவற் பணியில் கவனமாய் இருக்கிறார். கூடியிருப்பவர்களுக்குச் சந்திரனைச் சுட்டிக்காட்டி ப்ரபு ஸ்ரீராம் சில சொற்கள் கூறுகிறார். துளசிதாஸர் வாக்கிலேயே அவற்றைக் கேட்போம்.

' பூரப் திஸா பிலோகி ப்ரபு தேகா உதித மயங்க் |
கஹத ஸபஹி தேகஹு ஸஸிஹி ம்ருகபதி ஸரிஸ அஸங்க் ||
பூரப் கிஸி கிரி குஹா நிவாஸி |
பரம ப்ரதாப் தேஜ பல ராஸி ||
மத்த நாக தம கும்ப பிதாரீ |
ஸஸி கேஸரி ககன பன்சாரீ ||
பிதுரே நப முகுதாஹல தாரா |
நிஸி ஸுந்தரி கேர ஸிங்காரா ||
கஹ ப்ரபு ஸஸி மஹுன் மேசக தாயீ |
கஹஹு காஹ நிஜநிஜ மதி பாயீ ||

என்ன அழகான பதவின்யாசம்! எத்துணை அழகிய உவமை! பாருங்கள். கிழக்குத் திசை என்பது மலைக் குகையாம். சந்திரன் அதில் வாழ்ந்து வரும் சிங்கமாம். மாலைப் போதில் கனத்து வரும் இருள் மத்த கஜங்களாம். அவற்றை அடித்துக் கொன்று விட்டு சந்திரனை சிம்மம் ஆகாய வனத்தில் சுயேச்சையாகத் திரிந்து கொண்டிருக்கிறது. இறந்த இருள் யானைகளின் மத்தகங்களின்றும் தெறித்து வீழ்ந்த முத்துக்களைக் கொண்டு நிசாபதியான சந்திர சிம்மம் தன் மனைவியாம் இரவை அலங்கரிக்கிறதாம். இந்த அழகான உருவகத்தைக் கூறி மற்றவர் கவனத்தைச் சந்திரன் பால் திருப்பிய ஸ்ரீராமர் "அச் சந்திரனில் கருப்பாகத் தெரிகிறதே அது என்ன? அவரவர் அபிப்பிராயத்தைக் கூறுங்கள்" என வினவினார்.

முதலில் அமர்ந்திருந்தவர் சுக்ரீவன். அவர் முதற்கண் மறுமொழி பகர்ந்தார். "என் கருத்துப்படி கண்ணாடி போன்ற தூய சந்திரனில் பூமியின் நிழல் ஆங்காங்கு கருப்பாய்ப் பிரதிபலிக்கிறது. அவ்வளவுதான்." சுக்ரீவன் அரசரல்லவா? அவருக்கு எப்போதும் பூமியைப் பற்றிய சிந்தனை இருப்பது இயல்பு. அதற்கேற்பத் தானே அவர் கற்பனையும் இருக்கும்?

இராமர் மௌனமாக வீடணனை நோக்கினார். வீடணர் உடனே "ஐயனே! சந்திரனில் தெரியும் அக் கருப்பு வேறொன்றுமில்லை. பகைவனான ராகு இவன் மார்பில் அடித்ததன் அடையாளமல்லவா அது!" என்றார். ராவணனிடம் அடியுண்டு அவமானப் பட்டு வந்தவர் ராம பக்தனான வீடணர். அவரால் அதை மறக்க முடியவில்லை. எனவே சந்திரனின் கருப்பு பற்றி அவர் இவ்வாறு அனுமானித்ததும் இயல்பே.

திருமதி. எம். ஜனகவல்லி,
சென்னை-44.




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ், கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
19—வது பிளாக் [கோயில் வீதி.
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
c/o N. கோதண்டராமன், கனரா
பேங்க், 25, நந்தி கோயில் தெரு,
தெப்பக்குளம், திருச்சி-2.

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

திருமதி.ஏ.வனஜாகிருஷ்ணமூர்த்தி,
46, பழனியாண்டவர்கோயில்தெரு,
களஞ்சியம் ஏஜென்ஸீஸ்,
கொஸபாளையம், ஆரணி-1.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட், ஜெய்பூர் (P.O.)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்பத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு.எஸ்.என்.கிருஷ்ணய்யாசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா.
நியூஸ் ஏகஜண்ட், நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை, சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி—642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்.
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்ததி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல், கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல்
கிழக்கு பஸ் நிலையம், [மர்ச்சண்ட,
சித்தரதுர்க்கா.

திரு. வி. திருவேங்கடம் நாயுடு,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன். டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு—603001.

திரு. கே. ஆர். பாஸ்கர் செட்டி,
22/110,மெயின் தெரு, குண்டக்கல்
அனந்தப்பூர் மாவட்டம்
ஆ. பி. (P.O.)

திரு. வி. லக்ஷ்மி நாராயண செட்டி
மளிகை, பஜார் தெரு, [யார்
இடப்பாடி, சேலம் மாவட்டம்.

திரு. எம். வீரபாகு,
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி, தமிழ் நாடு.

திரு. எஸ். ஜகன்னாதன்,
17-3-1/5 சுந்தரய்யர் வீதி,
சித்தூர். (ஆ. பி.)

திரு. பி. ராஜமாணிக்கம்,
1 மஹாலி அம்மன் கோயில் தெரு,
ஆனைமலை-642104.

திரு. எம். வெங்கடராம அய்யர்,
நெ. 8, தாரகேசவரர் சுவாமி வீதி,
தோட்டபாளையம், வேலூர்.

திரு. ஏ. கணபதி பிள்ளை,
ஸ்டாம்ப் வெண்டார்,
அறகண்ட நல்லூர்—605752.

திருமதி. எஸ். சீதாலக்ஷ்மி,
1, ஜவுளிக்கார தெருவு,
திருவாரூர்—610001.

ராமர் மென்னகை புரிந்து அங்கதனை நோக்கினர். மூன்ருவதாய் அமர்ந்திருந்தவர் அவரே. "ப்ரம்மா ரதிதேவியின் முகத்தைப் படைக்கையில் இச்சந்திரனிலிருந்து ஸாரமான பாகத்தைக் கத்திரித்து எடுத்துக் கொண்டார். எனவே அதில் துளை விழுந்து விட்டது. அத்துளை வழியே அதன் பின்னேயுள்ள ஆகாயத்தின் நிழல் தெரிகிறது" என்ருர் அங்கதன். அங்கதன் அனுமானித்ததும் அவர் நிலைமைக்கு ஏற்பதான். வாலியின் ராஜ்யம் அவருக்குப் பின் மகனை அங்கதனுக்கு அல்லவா கிடைத்திருக்க வேண்டும். நிகழ்ந்ததென்ன? ராஜ்யம் சுக்ரீவனுக்கு அல்லவோ கிடைத்துள்ளது? உரியது கிடைக்காமல் போனல் எவர் நெஞ்சமும் துளைபட்டுத்தானே போகும்? அங்கதன் பேச்சு அதைப் புலப்படுத்துகிறது.

ப்ரபு ராமர் சிந்தனையிலாழ்ந்தார். 'சந்திரனில் உள்ள தோஷத்தைப் பற்றி நாம் கேட்டோம். ஆனல் இம் மூவரும் தத்தம் மனநிலையைப் பிரதிபலித்தவர்களாய் களங்கமற்றவனென்றும், அடிபட்டவனென்றும், ஸாரத்தைப் பறி கொடுத்து வறியனுனவனென்றும் கூறி அவனைக் களங்கமற்றவனுக்கி விட்டனர். நாம் சந்திரனின் களங்கத்தை எடுத்துரைத்து அதன் மூலம் ஹனுமானின் ஆமோதிப்புக் கிடைக்கிறதா பார்ப்போம் என்று கருதியவராய் ராமர் கூடியிருந்தவர்களை ஒரு முறை நோக்கிப் பேசத் தொடங்கினர். "ஆலகால விஷம் இச்சந்திரனின் உடன் பிறந்த சகோதரன். (ஒரே பாற்கடலினின்று இருவரும் வந்தனரன்ருே?) சந்திரனுக்கு அவன் பால் அளவற்ற அன்பு. எனவே அவனுக்குத் தன் இதயத்தில் இடம் தந்திருக்கிருன். எனவே தான் விஷம் தோய்ந்த தன் கிரணங்களால் விரக தாபமுடைய ஆடவர் பெண்டிரை இவன் வருத்துகிருன். அந்தக் கருமை விஷமல்லாவிடில் இயல்பில் குளிர்ந்தவனை இச்சந்திரனின் கிரணங்களுக்கு எரிக்கும் தன்மை எங்கிருந்து வந்தது?" சீதையைப் பிரிந்திருக்கும் நிலையில் சந்திரகிரஹணம் தன்னை வருத்துவதையும் சொல்லாமற் சொல்லி விட்டார் ஸ்ரீராமர். சந்திரனின் களங்கத்தை உணர்த்திய பெருமிதத்துடன் ஹனுமானைப் பார்த்தார்.

ஹனுமான் சிறிது சிந்தித்தார். 'இது மிகச்சிக்கலான ப்ரச்னையாக மாறிவிட்டது. ப்ரபு தன் கையால் அம்பைச் சீர் செய்து கொண்டும் சந்திரனைக் குற்றவாளியாகப் பார்த்துக் கொண்டுமிருக்கிருர். வானர சேனைக்குத் தன் பலத்தை நிரூபிக்கு முகத்தான் அச்சந்திரன் மீதே இந்த அம்பைச் செலுத்தி அவனைத் தீர்த்து விடுவாரோ? ப்ரபு ஸ்ரீராமர் சர்வசக்திமான். எதுவும் செய்ய வல்லவர். ஆனல் தேவர்களைக் காக்கவும் அசுரர்களை அழிக்கவும் அல்லவா ப்ரபுவின் அவதாரமே ஏற்பட்டது? சந்திரன் தேவருள் ஒருவனுயிற்றே? ஸ்ரீராமர் வேண்டுமென்றே இவ்விதம் கூறி நம்மையெல்லாம் பரீட்சிக்கிருர். எனவே நாம் சந்திரன் களங்கமற்றவன் என்பதை நிரூபித்து நம் பதிலால் ப்ரபு சந்தோஷிக்குமாறு செய்ய வேண்டும்.' தெளிவு பெற்ற மதியினராய் ஹனுமான் ஸ்ரீராமரைப் பார்த்து அஞ்சலி செய்து, "ப்ரபோ? என் சிறு மதிக்கேற்ப சந்திரன் தங்களின் தாசன். தங்கள் உருவத்தைத் தன் இதயத்தில் வைத்து ஆராதிப்பவன். தங்கள் திருமேனி நிறமே சந்திரனில் நாம் காண்பது." (ஹனுமானும் தம் தாஸ்ய பாவத்தையே ப்ரதிபலித்தார்.)

## தங்கு வசதி விவரங்கள்

| காட்டேஜ் விவரங்கள் | கிடைக்கும் காட்டேஜ்களின் எண்ணிக்கை | நாள் ஒன்றிற்கு வசூலிக்கப்படும் வாடகை விவரங்கள் |
|---|---|---|
| **திருமலையில்** | | |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கஸ்ட் ஹவுஸ் | 30 | இரண்டு படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 16/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 20 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 20/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 30 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 15/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | | ஹீட்டர் ஒன்றுள்ள பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 9/- ஹீட்டர் இல்லாத பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 7/- |
| வேங்கடாசல காட்டேஜஸ் | 16 | ,, |
| ஆழ்வார் நகர் காட்டேஜஸ் | 40 | ,, |
| வ்வேலி வ்யூ காட்டேஜஸ் | 9 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 16/- |
| நாராயணகிரி காட்டேஜஸ் | 12 | ,, |
| சங்கு மிட்டா காட்டேஜஸ் | 81 | இரண்டு கட்டில்களைக் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 10/- பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 5/- |
| சேஷாத்திரிநகர் காட்டேஜஸ் | 68 | ஹீட்டர் ஒன்றினைக் கொண்ட முழு காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 12/- |
| அஞ்சநாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் ஒன்றுடன் கூடிய காட்டேஜின் 'ஏ' பகுதிக்கு ரூ. 7/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் இல்லாத காட்டேஜின் 'பி' பகுதிக்கு ரூ. 5/- |
| **திருப்பதியில்** | | |
| தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ் | 18 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள்) | 30 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாசசத்திரம் (கீழ்ப் பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) | 40 | நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 15/- |

**குறிப்பு:** மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஹனுமானின் சாதுரியமான பதிலைக் கேட்டு ஸ்ரீராமர் பெரிதும் மகிழ்ந்தார். சீர் செய்த அம்பைக் கையில் எடுத்தவராய் ஹனுமானின் பதிலால் நிர்த்தோஷியான சந்திரனிடமிருந்து பார்வையை அகற்றினார். தென் திசையை நோக்கியவர், 'எதற்காக இங்கு வந்தோமோ அக்காரியத்தை இந்த அம்பால் துவக்கி வைக்க வேண்டும்' என்று கருதி, 'விபீஷணா! தெற்கே பார். மேகங்கள் திரண்டு மின்னல் மின்னுவது போல் இருக்கிறதல்லவா? இடி இடிப்பது கூட லேசாகக் கேட்கிறதே! மழையாயிருக்குமோ?'' என்று வினவினார்.

விபீஷணர், 'ப்ரபோ! இது மின்னலும் இல்லை. மேகக் கூட்டமும் இல்லை. லங்கா சிகரத்தின்மீது ராவணன் அமர்ந்து நாட்டியம் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவன் குடையே மேகம் போலக் காட்சியளிக்கிறது. மந்தோரியின் தாடங்கம் அசைவது மின்னல் போல ஒளிருகிறது'' என்றார்.

மறுகணமே ஸ்ரீராமர் கையில் எடுத்த அம்பைப் பூட்டி எய்தார். நொடியில் அவ்அம்பு குடை, கிரீடம் தாடங்கம் எல்லாவற்றையும் வீழ்த்தி ராவணனின் கர்வத்தைப் பங்கம் செய்து விட்டுத் திரும்பி வந்து அம்பறுத் தூணியை அடைந்தது. ராவணனின் சபை இதனால் பெரிதும் பீதியுற்றது.

ராவணன் மீது ஸ்ரீராமர் எறிந்த முதற்பாணம் இது. சுவேல பர்வதத்தில் ஸ்ரீராமரின் இந்த சபையை மஹாபக்த சிரோமணியான துளசிதாஸர் தம் 'ராமசரித மானஸ'த்தில் மிக அழகாக வருணித்துள்ளார்.

ஒவ்வொருவரும் அவசியம் படிக்க வேண்டிய ஒப்பற்ற நூல் 'துளசி ராமாயணம்.'



# திருச்செந்தூர்

''பாடாத நாவும் பணியாத சென்னி
யும்
பாவித்து அன்பாய் நாடாத உள்ள
மும்
நான் படைத்தால், நரகு ஏழும்
சென்று
கூடாது உயர்கதி கூடுவனோ?
குன்றெறிந்த வைவேல்—சேடுஆர்
மதில் செந்திலாய்!
என்கொலோ! நின் திருவருளே.

]சுவாமிநாத தேசிகர்]

முன்னுரை:

அலைமேவிப் பாயும் அழகுத் திருச்செந்தூரில் மலைமேவு முருகன் மன்னி வீற்றிருக்கின்றான். நாடிவரும் பக்தர்களின் பரவசத்தைக் கண்டு, சக்திவேல் முருகனும் பக்தியாய் மகிழ்ந்திருக்கிறான். முருகனுக்கு ஆறுபடை வீடுகள். அதில் திருச்செந்தூர் 2-வதாகத் தனிச்சிறப்புப் பெற்று விளங்குகின்றது. இதனை நக்கீரதேவர் திருமுருகாற்றுப் படையில் ''உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழச்சீர் அலைவாய்'' என்று புகழ்ந்துள்ளார்.

சூரனை வெற்றிக் கொள்வதற்காக முருகப்பெருமான் வந்து தங்கின இடமாதலால் ஜெயந்திபுரம் எனவும் அழைக்கப் பெறுவது இது. திருச்செந்தூர் முருகனை நக்கீரர், பகழிக்கூத்தர், குமரகுருபரர் முதலான பக்தர்கள் பாடிப் பரவியிருக்கின்றனர். புராணச் சிறப்பும், வரலாற்றுத் தொன்மையும் மிக்க இவ்வூர் திருநெல்வேலியிலிருந்து 50 கி.மீ. தொலைவில் உள்ளதாக தெரிகிறது.

செந்திலாதிபன், செந்திலாண்டவன் என்ற பல்வேறு திருப்பெயர்களால் பரவப்படும் இக்கடவுளை நாடி இந்தியாவின் பல பாகங்களிலிருந்து மட்டுமின்றி கடல் கடந்தும் ஆயிரக் கணக்கில் பக்தர்கள் நாள்தோறும் வந்தபடி இருக்கின்றனர். அத்தகு புகழ்மிக்க திருச்செந்தூர் ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமியைப்பற்றிய வரலாற்றை இங்குச் சற்றுசிந்திப் போமாக.

## செந்தின்மாமலை (திருச்செந்தூர்)

''தேவர் படைத்தலைமை பொறுப்
பெடுத்து—தோள்கள்
தினவெடுத்து சூரன் உடல் கிழித்து—
கோவில்
கொண்டே அமர்ந்த ஒருவீடு—அது
கடல் கொஞ்சம் செந்தூரிலுள்ள
படைவீடு''

சிக்கலில் வேல் வாங்கித் திருச்செந்தூரில் சூர சம்மாரம் என்பது பழமொழி. வேல் நெடுங்கண்ணியாகிய அம்பிகையிடம், சக்தி வேல் பெற்று முருகன் சூரபத்மனை அடக்கி வெற்றி கொள்ளத் திருச்செந்தூருக்குப் புறப்பட்டதாக வரலாறு. அலைகடல் ஓரம் அருள் மொழி கூறும் அண்ணல் செந்தூரான் தரிசனம் செய்ய ஆனந்தம். நாழிக் கிணற்றில் ஸ்நானஞ் செய்ய நாடாது வினை. கடலாடிக் கரையேறிக் கந்தனைக் காண கவலையெனும் கடல் விழாது காப்பான் கந்தன்.

''திரளுமணி தரளமுயர் தெங்கில் தங்கிப் புரள எறி திரை மகர சங்கத் துங்கத் திமிரஜல நிதிதழவு செந்தில்'' என்ற திருப்புகழிலிருந்து இதன் பெருமை விளங்கும். ஆறு படைவீடுகளுள் இரண்டாவதாகக் குறிப்பிடப் படும் இதனை கயிலைமலையனைய செந்தில் என்பர். அரும்பெரும் ஆறுமுக ஸ்தலம் திருச்செந்தூர்.

அலைவாயாகிய திருச்செந்தூர் கடற்கரையிலுள்ள ஒரு திவ்விய ஸ்தலம். கடலலைப்பாடி வரும் திருச்செந்தூர், என்னிடம் வருபவர்கள் ஸம்ஸாரக் கடலைத் தாண்டிவிடுவார்கள் என்ற உலகுக்கு அறிவிக்கும் முகமாகவே ஆண்டவன் கடற்கரையில் கோயில் கொண்டுள்ளான் எனவும், அலைகள் யாவும் எப்படிக் கரையிலடங்கி விடுகின்றனவோ அவ்வாறே அலைவாய் அழகனின் அடிபணிந்தவரின் ஆபத்துக்கள் அடங்கிப்போகும் என்றும் ஸ்ரீ ஆதி சங்கரர் சுப்பிரமணிய புஜங்கத்தில் போற்றுகிறார்.

---

முருகனடி. S. ஜெயராமன்,
சேலம்—1.

---

பாண்டிய நாட்டிலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில், தாமிரவன்னி நதிக்குத் தென் திசையிலே, ஜெயந்திமாநகரம், திருச்சீரலைவாய் எனவரும் பெயர்களுடைய திருச்செந்தூர் என்னும் இச்சுப்பிரமணிய தலமானது படைவீட்டுத்தலம் ஆறினுள் மிகவிசேடமுடையது. அலையலையாகத் துயரங்கள் நம்மை அணுகும்போது அலைவாய் சுவாமி செந்திலம்பதி ஓடோடிவந்து காப்பான் என்று குமரகுருபரர் குறிப்பிடுகிறார். பகழிக் கூத்தர் இவ்வூரிலேயே திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் இயற்றியருளினர். ஐந்தெழுத்தே ஆறெழுத்தாக மாறிய சரவணபவனை உள்ளன்புடன் ஓதுவார் சிந்தையில் செந்தில்குமரன் குடிகொள்வான். நெய்தல் நிலக் கருப்பொருளாகிய முத்து மிகுதி திருச்செந்தூர் பகுதியில். நாற்றிசையிலும் நாதன் புகழைப் பரப்பிவரும் நாளில் திருச்செந்தூர்க்கருகில் அருணகிரிநாதரோடு அவரது சமகாலப் புலவரான வில்விபுத்தூரார் வாதுசெய்யவந்தார். இவ்வாது திருச்செந்தூரிலேயே நடைபெற்றதென்பர்.

ஜெயந்திநகரம், செந்திலாபுரி, திருச்சீரலைவாய்என்றெல்லாம்வர்ணிக்கப்படும் புண்ணிய க்ஷேத்திரம் இது. குமரக் கடவுள் சூரபதுமாதியரை வதம் செய்ய முற்பட்டதும், தமது பரி

வார தேவதைகளோடு வந்து முகாமிட்டதும் இத்திருச்செந்தூரிலாம். இங்கே சூரனைப் பூண்டோடு அழித்து, அவனை சேவற் கொடியாக மாற்றி கொண்டதால் ஜயந்திநகரம் என்ற பெயருடையதாயிற்று.

## மூலஸ்தான விசேஷம்:

பால சுப்பிரமணியன்தான் மூலவர். செந்திலாதிபன், செந்திலாண்டவன் என்றெல்லாம் அழைக்கப்படுகிறான். மாமுனிவர்களும், அவதார புருஷர்களும் ஆராதித்து வந்த தெய்வம். ஆதிசங்கரர் இந்தத் தலத்திற்கு வந்து சிறிது காலம் தங்கியிருந்து புஜங்க ஸ்தோத்திரம் பாடியுள்ளதிலிருந்தே

பெரியாழ்வார்—திருப்பதி.
திரு. S. V. K. S. ஸ்ரீநிவாசன், திருப்பதி.



இதன் மஹிமை விளங்கும். சுக ரிஷியும், அகத்தியரும் வழிபட்டிருக்கிறார்கள். இங்கே குரு அம்சமாகத் திகழ்கிறான் குருநாதன். ஆதிகாலத்து நாடிகளும், ஜோதிட நூல்களும் குரு வழிபாட்டுக்கு இத்தலத்தையே முக்கியமாகக் குறிப்பிடுகின்றன. அருணகிரியாரும், குமரகுருபரரும் பகழிக் கூத்தர் என்ற வைணவப் பக்தரும், இங்கு விசேஷ பக்தி காட்டி அருள் பெற்றிருக்கிறார்கள். திருச்செந்தூரில் கேரள ஆகம ஆச்சார முறைப்படி தான் பூஜைகள் நடைபெறுவதாக அறிகிறோம். தமிழகத்தில் போற்றிமார் நடத்தும் பெரிய ஷேத்திரம் இது ஒன்றுதான்.

மூலஸ்தானத்தின் அமைப்பைக் கவனித்தால் எங்கும் காணப்படுவது போல் அபயகரம் இல்லை இங்கே. இது பற்றி ஒரு கதை சொல்லப்படுகிறது. அது விபரம் அறியலாமாக. ஸ்வாமி வழக்கம்போல் தந்தைக்கு (ஈசனுக்கு) பூஜை செய்து கொண்டிருந்தாராம். அது சமயம் நாரதமுனிவர் சுவாமியைத் தரிசிக்க வந்தவர் துதி பாடவும், சுவாமி அர்ச்சனை செய்த நிலையிலேயே திரும்பிப் பார்த்தாராம். செந்தில் பால சுப்பிரமணியன் அந்த அவதாரத்திலேயே இன்றும் பக்கர்களுக்குத் தரிசனம் அளித்துக் கொண்டிருப்பதாகக் கூறுவார்கள். இக் கதை விபரமும் பொருத்தமாகத்தான் இருக்கிறது.

காலச்சந்தியில் மூலவருக்குத் தாராபிஷேகம் நடத்துவார்கள். உச்சகாலத்தில் ஷண்முகார்ச்சனையும் உண்டு. இரண்டும், அடிக்கடி இங்கே நடைபெறுகிற விசேஷமாகும்.

## தாராபிஷேகம் - ஷண்முகார்ச்சனை :

மூலவருக்கு சிரசுக்கு மேல் சிறு துவாரங்களோடு கூடிய பெரிய வெள்ளிப் பரத்திரத்தில் பசும்பாலை நிரப்பி, நிறுத்தி அபிஷேகப்பாலை மேலும் மேலும் பாத்திரத்தில் நிரப்பிக் கொண்டேயிருப்பார்கள். துவாரங்கள் வழியாக தாரைபோன்று பால் பகவான் தேகத்தில் விழுந்து கொண்டேயிருக்கும். சுமார் மூன்று மணி நேரம் தங்கு தடையின்றி இந்த அபிஷேகம் நடந்துகொண்டேயிருக்குமாதலால், காண்போர் கண்குளிரக் காட்சியளித்தவண்ணமிருப்பான் முருகன்.

ஏராளமான செலவில் ஷண்முகநாதனுக்குப் புஷ்பாஞ்சலி செய்வார்கள். ஆறுபட்டர்மார் ஆறுமுகத்தைச் சுற்றி நின்று ஒரே மாதிரியாக ஒரே சமயத்தில் ஸகஸ்ரநாம அர்ச்சனை செய்து தூப, தீப, நைவேத்தியங்கள் செய்வார்கள். ஒரு தடவை பார்த்து விட்டால் அப்புறம் அந்தக் காட்சி நம் கண்ணை விட்டகலாது.

## பன்னீர் இலை விபூதி விசேஷம்:

சூரபதுமனை வதம் செய்த பின் தம்மைச் சூழ்ந்து நின்ற பரிவாரங்களுக்கு சுவாமி தமது பன்னிரு கைகளாலேயே விபூதி பிரசாதம் வழங்கினாராம். பகவான் பன்னிரு கைகளுடைய ஸ்தானத்தைப் பன்னீர் இலை என்று பெற்று, திருச்செந்தூர் "இலை-விபூதி" என்ற புகழோடு அடியார் கைகளில் தேவ பிரசாதமாக வந்து சேருகிறது. பரமாச்சாரியார் ஆதி சங்கரர் புஜங்க ஸ்தோத்திரத்திலும் இந்த இலை விபூதியைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதால் தேவ ஔஷதமாகக் கருதி இதைப் பக்தகோடிகள் பெற்றுச் செல்கின்றனர். குமார உபநிஷத்தின் கடைசி சுலோகமும் இதன் பெருமையை வர்ணிக்கும்போது,

வீராஜ பதரஸ் தகுமார பூதிம்-பயோ
பக்த ஹஸ்தேனே
ஸ்மஸ் வீகரோதி-ஸ-ஸர்வ ஸம்பது
ஸ்மவாப்தி பூர்ண;
பவேத்தி ஸம்யாதிதம் நீர்க்க மாயு;
ஏதாத்ரு சானுக்ரஹ
பாஸிதாய
ஓம் ஹம்ஸ; ஓம் தஸ்மை ஷண்முகாய
நமோ (அஸ்து)
ஸாகர்ய கோலாயவை ஷண்முகாய

என்று கூறுகிறது.

## சூரசம்ஹாரமும் அதன் தத்துவமும்

இறைவன் நல்லவர்களை அறக் கருணையாலும், பொல்லாதவர்களை மறக் கருணையாலும் ஆட்கொள்ளுகின்றான் என்பது தத்துவம். தவத்தால் வரம் பல பெற்ற சூரன் நன் மக்களுக்கும் தேவர்களுக்கும் கொடுமை பல செய்தான். மீளா நரகத்திற்கு ஆளாகி பெரும்பாவியாகிவிடக்கூடாது என்ற கருணையினால் இறைவன் குமார நாயகனாகத் தோன்றி வேலாயுதத்தால் சூரன் உடலினை இரு கூறாக்கி, அவற்றுள் ஒன்றினை மயில் வாகனமாகவும், மற்றொன்றினைச் சேவற்கொடியாகவும் தன்னோடு சேர்த்துக் கொண்டான். இதனை விளக்கவே, திருவிழாக்களில் சூரசங்காரம் முடிந்தவுடன் முருகனை மயில் வாகனத்தில் ஏற்றுகின்றார்கள். அப்போது அவனுக்கு சேவல் கொடியாகிறது.

ஆணவ மலமாகிய சூரனது உடம்பைக் கொன்று, ஆணவ மலம் நீங்க அநாதி தன்மையுள்ள ஆத்மவாகிய அவனது உயிரினைத் தன்னோடு சேர்த்தாட் கொள்ளுகின்றான் ஆண்டவன் என்பதே தத்துவம்.

## அருள் பெற்ற அடியார்கள்:

குமரகுருபரர்!

குமரகுருபர சுவாமிகள் ஐந்து வயது வரையும் ஊமையாயிருந்து ஐந்தாம் வயதிலேயே திருச்செந்தூர் முருகக் கடவுளது திருவருளினால் கந்தர் கலி வெண்பாவை அருளி செய்தனர். இக் கலிவெண்பாவை தினந்தோறும் நியமமாக அன்புடன்பாராயணம் பண்ணக் கடவர்கள்.

## குமரகுருபரர் அருளிய நூல்கள்

1. சகலகலாவல்லி மாலை என்னும் சரஸ்வதி ஸ்தோத்திரம்.
2. கந்தர் கலி வெண்பா.
3. முத்துக்குமாரஸ்வாமி பிள்ளைத் தமிழ் முதலானவைகளாம்.

# சக்திக் கனல்

கவிஞர். ப. கோவிந்தராசு, ஈரோடு–1.

ஆறுமுகன் துணை நமக்கு நாடு — அவன்
அருட்புகழை மறவாமல் பாடு — திரு
நீறணியப் பிணி தீர்க்கும் நெடுவேலன் நம்மவர்க்கு
நிதியே – உயர் – பதியே.

நீலமயில் ஏறிவரும் முருகன் — அன்பர்
நெஞ்சினிக்கக் காட்சிதரும் மருகன் — ஐயன்
கோல எழில் கூட்டுமருள் கொள்ளையின்பக் கீர்புதுமை
கொஞ்சும் – நலம் – விஞ்சும்.

கற்றவர்தாம் வியக்கும் நற் கனியே! — உனைக்
கதியென்பார்க் கில்லைதுயர் பிணியே! — புகழ்
நற்றமிழின் ஔவைக்கே நாவற்கனி தந்துவந்த
நல்லாய் – தவ – வல்லாய்.

பழனிமலை நின்றருளும் முருகா! — உனைப்
பணிந்தன்பில் பாடுமுளம் உருக — எந்தன்
பழவினைகள் அழிந்திடவே பக்தி நெறி தழைக்கச்செய்
பதமே – எமக் – கிதமே.

காவடிகள் ஆடிவரும் ஆட்டம் — பக்தர்
கசிந்துருகிப் பாடிவரும் கூட்டம் — உன்றன்
சேவடியே பெரும்பேறாய் சென்னிமிசை தொழ, நலமே
சேர்ப்பாய் – வினை – தீர்ப்பாய்.

வள்ளி மயில் வேலுடன் நின் மாட்சி — அந்த
வடிவழகில் வந்தருளும் காட்சி — வண்ணப்
புள்ளி மயில் கொண்டவனைப் பூந்தமிழிற் பாடவுள்ளம்
பொங்கும் – இன்பம் – தங்கும்.

தேவருக்கும் தேடரிய பொருளே! — நாடித்
தேடிவரும் தொண்டருக்கின் னருளே! — உயர்
மூவருக்கும் முதற்பொருளாய் மூண்டொளிரும் பிரணவத்தின்
மூலம் – திருக் – கோலம்.

இன்துணையே! சரணடைந்தேன் வேலா! — என்றன்
இடர்களைந்து நலமபுரியும் சீலா! — பூங்
கன்று வந்து மடி முட்டக் கனிந்திரங்கும் பசுவைப்போல்
சொரிவாய் – அருள் – புரிவாய்

நவசக்தி ஒளிப்பிழம்பின் மாற! — எழும்
நானென்ற அகந்தை வெல்லும் வீர! — அருட்
சிவசக்திக் கனலெனவே திகழ்ந்தோங்கும் இறைமாட்சி
பெரிதே – சொல்ல – அரிதே.

கையளவு கொண்ட மனம் வாடும் — அதில்
கடலளவில் ஆசை எழுந் தாடும் — நாளும்
செய்பிழைபொ றுத்தருளும் செந்திலவன் பாதப்பணி
தகுமே – செல்வம் – மிகுமே!

**பகழிக்கூத்தர்:**

இராமநாதபுரத்தைச் சார்ந்த செம்பி நாட்டிலுள்ள சன்னுசிக் கிராமத்திலே ஸ்ரீவைஷ்ணவராய் பிறந்தார். தந்தையார் - தருப்பாதனர். காலம் கி.பி. 17-ம் நூற்றுண்டினராக இருக்கலாமென்பர். இவர் ஒரு நாள் கொடிய வயிற்று நோயால் பெருந் துன்புற்று வருந்தினர். பல வகையால் மருத்துவஞ்செய்தும் நோய் நீங்கப் பெருமையால் அவரது அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கத் திருச்செந்தூர் முருகன் மீது பிள்ளைத் தமிழ் பிரபந்தம் பாடினர். இவரது நோயும் நீங்கிற்று. பின்னர் இந்நூலைத் திருச்செந்தூரில் அரங்கேற்றி அவனருள் பெற்றுர்.

**பிள்ளைத் தமிழ்:**

இது தமிழில் வழங்கும் தொண்ணூற்ருறு வகை பிரபந்தங்களுள் ஒன்று. பாட்டுடைத் தலைவனுகிய குழந்தை முருகனைப் பத்து பருவங்களின் நிகழ்ச்சிகளில் அமைத்துப் பாடப்படுவது.

**ஆதிசங்கரர்:**

ஈஸ்வராம்சமான இவர் இத் தலத்தில் சிறிது காலம் தங்கியிருந்து சுப்பிரமணிய புஜங்க ஸ்தோத்திரத்தில் பாடியுள்ளளார் என்பதான கருத்து அறிய வேண்டியது.

**திருச்செந்தூர் மார்க்கம்:**

திருநெல்வேலியிலிருந்து 36 மைல் தூரத்தில் வெகு ரம்மியமான கடற்கரையில் கடலலைகளைக் கிழக்கு எல்லையாகக் கொண்டு முருகப் பெருமானின் ''விளக்கு வேல்'' கம்பீரமாக காட்சியளித்துக்கொண்டிருக்கும். ஆலயக் கோபுரமும், நீண்ட மா பெரும் நடைபாதையும், கிரி பிரதக்ஷிணமும், பெரிய விசாலமான வெளிப் பிராகாரமும் உட் பிராகாரமும் கொண்ட கோவிலில் கிழக்கு நோக்கி ஆண்டவன் அரசு செலுத்திக் கொண்டிருக்கிறுன். பஸ், ரயில் போக்குவரத்து உண்டு. மாசி, வைகாசி, விசாகம், ஆவணி, ஸ்கந்த ஷஷ்டி ஆகியவை பெரு விழாவாகக் கொண்டாடப்படுகின்றன.

**முடிவுரை:**

சகல லோகநாயனுகிய சிவகுமாரன் உலக ஆன்மாக்களின் பிறப்பு, இறப்பு, மூப்பு முதலிய துன்பங்களைப்போக்கி, உயர்நிலை அடைய அருள் செய்கின்றுன். அன்னவனும் செந்தில் வேலிடம் நாமும், நல்லருள், நற்கருணை, நற்பண்பு, பேரன்பு, முதலியனவற்றை வேண்டி நிற்போமாக. அப்பொழுது பன்னிரு விழிகளிலே பரிவுடன் வாரிவழங்குவான் தன் அருளை செந்திலாண்டவன். ஏனெனின் திருச்செந்தூரில்தான் முருகன் அருளே வடிவமாகக் கொண்டிருக்கிறுன். அத்தகையவன் கருணையுடன்வந்து காட்சி தருவான் 'கந்தா' என்பவர்க்கு.

'' செந்தூரில் போய்க் கருணை வெள்ளமென வீற்றிருந்து '' என்ற குமரகுருபரசுவாமி கந்தர் கலிவெண்பா இவ்வுண்மையை உறுதிப்படுத்துகிறது.

இத்தகையப்பெரும் சிறப்புவாய்ந்த திருச்செந்தூரில் அருணகிரி, ஆதிசங்கரர், சிவப்பிரகாசர், நக்கீரனுர், வென்றிமாலை கவிராயர், குமரகுருபரர், பகழிக் கூத்தர், சுவாமிநாத தேசிகர் முதலானப் பலரும் முருகனை வழிபட்டு, பேறு மிகப்பெற்று, அருள் நிலை அடைந்திருப்பதாக வரலாறு நமக்குக் கூறுகிறது. நாமும் அவ் இறைவனுடைய அருளைக் கண்டு, சென்று தொழுது வருவோமாக. அதற்கு திருமுருகன் திருவருள், கூட்டுவானுக.



ஸ்ரீ ஆஞ்சநேயசுவாமியுடன் ஸ்ரீ வைகானசார்யார், திருப்பதி

திரு. ஏ. கே. இராமாநுஜம்-திருப்பதி.



# புதன்

குமாரி. எஸ். உமாமகேஸ்வரி,
தஞ்சாவூர்.

வான வீதியில் பவனி வரும் அறிவும், அழகும் ஒருங்கே பெற்ற கிரகம் புதன். கல்விக்குரிய கிரகம் ஆதலால் புலவன், மேதை, தூதுவன், பொரையன், கணக்கன் என்று அழைக்கப்படுகின்றான். மற்றும் இவனுக்கு புந்தி அருணன், கிரகபதி என்ற பெயர்களும் உண்டு.

சோதிட நூல்கள் வழி மதிமகன், மால் என்ற பெயர்கள் இவனுக்கு வழங்கப்படுதலும் காண்கிறோம். இவனது தோற்றம் பற்றிய செய்தி சந்தேகத்திற்கு இடமிலாதது. அதாவது, தாரைக்கும் சந்திரனுக்கும் பிறந்தவன் என தாரையாலும், பிரம்ம தேவனாலும் அறிவிக்கப்பட்டது என சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதனால் தான் 'மதிமகன்' எனவும், 'தாராஸுதாய' என்ற நாமாவளி மூலம் தாரை மகன் எனவும் அழைக்கப்படுகிறான்.

சந்திரனின் வம்சமான இவன் சிவ பெருமானை துதித்து வரம் பெற்று நவக்கிரகங்களில் ஒன்றாக மாறி பிரகாசிக்கத் துவங்கினான். சுயம் பிரகாசனான இவன் சூரியனைப் போலவே மேருமலையை வலம் வருகிறான்.

நாமாவளி மூலம் இவனைப்பற்றி அறிந்து கொள்வோம். ஸோம வம்ஸப்ரதீபகாய-சந்திரனின் வம்சத்தை வளர்ப்பவன். தாராஸுதாய-தாரையின் மைந்தன். பீதாம்பராய - திருமால் ஆக குறிக்கப்படுபவன். ஸோம ப்ரியகராய-சந்திரனுக்கு பிரியமானவன். வாக்விலக்ஷணாய-வாக்கு வன்மையையும், வித்யா விசக்ஷணாய-கல்வியையும் உண்டாக்குபவன். வாணிஜ்ய நிபுணாய-வியாபார பெருக்கத்தை தருபவன். வேதத்த் வஜ்ஞாய, வேத விதே-வேதத்திற்கு அதிகாரி. ஸௌம்யாய-சௌமியக்கிரகமானவன். புத்திமதே-புத்தியை பெருக்குபவன். பாண மண்டல ஸம்ஸ்ரிதாய-அம்பு வடிவ மண்டலத்தில் வீற்றிருப்பவன்.

இவனது கிரக தேவதை விஷ்ணு. ஆகவே இவன் 'மால்' என்றும் இவ



னது வாரம் 'மால் நாள்' என்றும் விளங்குகிறது. 'ஸர்வரோக நிவாரகாய'-எல்லா துன்பங்களையும் நீக்குபவனான இவனது வாரத்தை திருவேங்கட சதகம் நோய்க்கு இடங் கொடார் செய்கையில்,

> 'சனி புதன் நனிலெண்ணெய் வெந்
> நீரின் மூழ்குவார்
> சாருமிள வெயில் விரும்பார்'

என குறிப்பிட்டு உணர்த்துகிறது. அது மட்டுமின்றி,

> 'பொன் கிடைத்தாலும் புதன்
> கிடைக்காது'

என்ற பழமொழியும் புதன் வாரத்தின் அருமையை செப்புகிறது.

கவியரசனும் ஜோதிடத் தலைவனுமான புதனைப் பற்றிய விவரங்களை ஜோதிட வழியில் ஆராய்வோம். சௌமியக்கிரகமான இவன் உபயக் கிரகம். அலிக்கிரகமான இவனை சுபக்கிரகம் என்றும், சில நூல்கள் அரை சுபக்கிரகம் என்றும் கூறுகின்றன. ஆனாலும் இவன் சூரியனுடன் சேரும் போது அசுபனாகிறான் என கூறப்படுகிறது. கன்னி உச்ச வீடு. மிதுனமும், கன்னியும் இவனது ஆட்சி வீடுகள். இவனது தசை பதினேழு வருடங்கள். இராசியில் இவன் நிற்கும் காலம் ஒரு மாதம். எல்லா நேரங்களிலும் பலமுடையவன். வித்தியா காரகன் ஆன இவன் வாக்கு, தோல், தாய் மாமனுக்கு அதிகாரி. கல்வி, மாதுலர், சுவீகார புத்திர காரகன். புதன் பன்னிரெண்டாம் இடத்திற்கதிபதியோடு கூடின் வேண்டுமென்று விரும்புமிடங்களில் சேர்வர் மறுமையில். சந்திரனிலிருந்து புதன் எட்டில் அமைந்தால் சந்திராதி யோகம். இவனுக்கு சூரியனைத் தவிர மற்ற கிரகங்கள் மித்ரு. இவனுக்கு 7-ம் பார்வை மட்டும் உண்டு.

இவனுக்குரிய நிறம் பச்சை. வடிவம் நெடியது. ஜாதி வைசியன், பாஷை ஜோதிடம். சாத்து வீகாதி குணங்களில் புதன் தாமசர். இவனுக்குரிய பிணி-வாதம். திசை-வடகிழக்கு. ஆசனம்-அம்பு வடிவம். உலோகம் பித்தளை. ரத்னம்-மரகதம். தானியம்-பச்சைப் பயிறு. புஷ்பம்-வெண் காந்தள் சமித்து-நாயுருவி. ஊஷ்ண-சீதோஷ்ண மாக புசிப்பவன். சுவை - உவர்ப்பு. வாகனம்-குதிரை. வாயுக் கிரகமான இவனது நிலப்பரப்பு கேகய நாடு முதல் விந்தமலை வரை. இவனுக்குரிய உடல் அங்கம்-கழுத்து. க்ஷேத்திரம்-

மதுரை. மூர்த்தி - ஸ்ரீ சொக்க நாதர். காயத்ரீ மந்திரம்.

'' கஜ த்வஜாய வித்மஹே சுக ஹஸ்தாய
தீமஹி
தந்நோ புத: ப்ரசோதயாத்''

சூரியனுக்கு வடகிழக்கே பிரதிஷ்டை செய்து வணங்கப்படும் இவனது நிறம் பொன் நிறம். மஞ்சள் நிற ஆடைகளை, மலர்களை, பொன் அணிகலன்களை புனைபவன். திருக்கரங்கள் நான்கு. வலது கரம் அபயமும் மற்ற கரங்கள் கதையும், வாளும், கேடயமும் கொண்டுள்ளன.

சங்கீத தாதா வான இவனுக்குரிய வாரத்தில் இவனுக்குரிய கோலமிட்டு புதஸ் துதி, ஸௌந்தர்ய லஹரி ஆகியவற்றை கூறி வழிபட்டால் ஸகல சாஸ்திர ஞானம் பெறலாம். இவனுக்குரிய சாந்தி வெண்காந்தள் அல்லது துளசியினால் அர்ச்சனை நமஸ்காரம். நாயுருவியினால் ஓமம். பச்சைப் பயிறு தானம். விஷ்ணு மூர்த்திக்கு விசேஷ அபிஷேக ஆராதனை. விஷ்ணு சகஸ்ர நாமபாராயணம்.

'புதன் அங்குசத்திற் பிறந்தவன், சிவந்தவன், தியாகி, மோகி, தெய்வங்கள் தொழுவன், சத்தியவான், பாடவல்லவன், ஞானி, போர்வீரன், தருமவான், தேஜசுடையவன், பிரியமுள்ளவன், மேன்மைப்படுங்குணத்தான்' என்கிறது ஜாதக ரகசியம்.

இவ்வாறு எல்லாம் சிறப்பு தரும் புத பகவானை கீழ்கண்டவாறு துதித்து அறிவும், புகழும் பெறுவோம்.

' மதனனூான் முதலா நான்கு மறை
புகல் கல்வி ஞானம்
விதமுடனவரவர்க்கு விஞ்சைகளருள்
வோன் றிங்கள்
சுதன்கன பசுவு பாக்கியஞ் சுகம்பல
கொடுக்க வல்லன்
புதன்கவிப் புலவன்சீர்பால் பொன்
னடி போற்றி போற்றி !'



# அபிராமி அருட்பா

திருமதி. ராஜலக்ஷ்மி பரமேச்வரன் - பெங்களூர்.

ராகம்: கேதாரம்

அன்னைக்கு ஆரத்தி எடுப்போமே நம்
அபிராமிக்கு ஆரத்தி எடுப்போமே (அ)

வெள்ளிக் கிழமை தோறும்
நாம் எல்லோரும் கூடி
அபிராமி அந்தாதி பாடி
அவளருளால் வந்த அருட்பாவை பாடி (அ)

சிந்தைகுளிர பன்னீர் வீசி
கண்கள் களிக்க சுகந்தம் பூசி
தாமரைப் பாதத்தில் மஞ்சள் பூசி
குங்குமத் திலகம் இட்டு வெண்சாமரம் வீசி (அ)

மங்கையர்க் கெல்லாம்
மஞ்சள் குங்குமம் கொடுத்து
தாம்பூலம் கொடுத்து
தாயின் பாதத்தை நமஸ்கரித்து (அ)

ராகம்: ஸிந்து பைரவி

அன்னையே என்னை நீ அறியாயோ தேவி
ஏனிந்த மௌனம் ஏழை என்னிடம் தாயே (அ)

அன்னையே உன்னை நான் ஒரு கணமும் மறவேனே
உன்னருளால் வந்த பாடல் தன்னை
பாடாத நேரமில்லை உன்னைப் பணியாத நேரமில்லை
உன்னை ஒரு கணம் நினையாத நேரமில்லை (அ)

அமிர்தகடேசர் அழகில் சொக்கி
என்னை நீ மறந்தாயோ
கன்றின்குரல் கேட்டு வரும் பசு போல்
நீ வருவா யம்மா
என் குரல் உனக்கு எட்டவில்லையோ தாயே
திருக்கடவூர் ஆலய மணியே அபிராம சுந்தரியே (அ)

ராகம்: பேகடா

கடைக்கண்ணால் என்னைப்பாரம்மா
எங்கள் அன்னையே அபிராமியே
ஆனந்த நடனம் செய்யும்
அமிர்த கடேச ப்ரியே (க)

உன்பாமாலை தொடுக்க எனக்கு
இன்னமும் அருள்வாயே திருக்கடவூர்
தேவியே அமிர்த கடேச ப்ரியே (க)

ஸோமாஸ்கந்தனின் சுந்தரி நீயே
ஸோம வாரத்தில் இந்த கவிதொடுத்தேன் தாயே (க)

சாம்பல் அணிந்த ஈசரின் தேவி நீயே
சங்காபிஷேகம் கொண்ட ஈசரின் தேவி நீயே
பக்த மார்க்கண்டேயனைக் காத்த ஈசன் மனோ ஹரியும் நீயே
பஞ்சாட்சரம் என்னும் மந்திரப் பொருளும் நீயே (க)



தொடர் கட்டுரை

## அத்தியாயம்-10
## விபூதி யோகம்
## பகுதி – 5

'இறைவன் எங்கே உள்ளான்?' என்ற கேள்விக்கும், 'இறைவன் எங்கே இல்லை?' என்ற கேள்விக்கும் பதில் காண்பது கடினம். ஆனால் இரண்டு கேள்விகளுக்கும் உள்ள பதில் ஒன்று தான். 'இறைவன் எங்குளான்?' என்ற கேள்விக்கு பதில் 'இறைவன் எங்கு முள்ளான்' என்பதே பதில்.

அருவமாய் எங்கும் நிறைந்த இறைவனை உருவமாய் வணங்கி வழிபடுவதற்காகத் தான் நமது முன்னோர் ஆலயங்களை உருவாக்கிப் போந்தனர். ஆரம்பத்தில் அருவத் தியானம் செய்தல் கடினம். உருவத் தியானம் செய்தல் எளிது. அதனால் தான் இத்தனை உருவங்கள், ஆலயங்கள், வழிபாடுகள் எல்லாம் நம்மிடையே நிலவுகின்றன. உருவம் முதல் நிலை, அருவம் முடிவு நிலை. புறத்தே உள்ள ஆலயம் உள்ளப் பெருங்கோயிலுக்கு எடுத்துக் காட்டு. 'வாஸுதேவ: ஸர்வம்' எனினும் 'ஆலயம் சென்று வழிபட்டால் அதில் ஒரு தனி அமைதியும் அனந்தமும் நமக்கு ஏற்படுகிறதல்லவா!

இயற்கையின் சிறப்பு அனைத்தும் ஈசுவர விபூதிகளேயாம். அவற்றை ஒவ்வொன்றாக விரித்து எடுத்துரைத்தால் அதற்கு முடிவே இருக்காது. அது சொல்லிலடங்காததாகும். அவற்றில் ஒரு சிலவற்றை மட்டும் பகவான் விபூதி யோகத்தில் அர்ஜுனனுக்கு எடுத்து விளக்குகிறார்.

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

எடுத்த எடுப்பிலேயே பகவான் உலகைப் பற்றிய முடிவான உண்மையைத் தெரிவிக்கிறார்.




# கீதை காட்டும் நல்வழி

அஹமாத்மா குடாகேச
ஸர்வ பூதாசயஸ்தித: |
அஹமாதிஸ்ச மத்யம் ச
பூதாநாம் அந்த ஏவ ச || 20 ||

''விழிப்புடையோய்! எல்லா உயிர்களின் உள்ளத்து உறையும் ஆத்மா நானே. உயிர்களின் ஆதியும் இடையும் இறுதியும் நானே.''

'गुडाकेश' என்று பகவான் அர்ஜுனனை அழைக்கிறார். 'குடாகேசன்' என்றால் தூக்கத்தை வென்றவன் என்பது பொருள். எடுத்த கருமங்களில் வெற்றி பெற வேண்டுமானால் நாம் முதலில் தூக்கத்தை வெல்ல வேண்டும். தூக்கம் கூடக்கூட நாம் தமோ குணம் மிகுந்தவர்களாவோம். தமோ குணம் தவிர்க்கப்பட வேண்டியதாகும். எனவே உலகியல் கர்மமாகட்டும் அல்லது ஆன்மீக மார்க்கமாகட்டும், தூக்கத்தை வென்றோரே வெற்றியடைவர். நமக்குத் தூக்கம் அடிமையாக இருக்க வேண்டுமே ஒழிய நாம் அதற்கு ஒரு போதும் அடிமையாகி விடக்கூடாது.

உயர்திணை மற்றும் அஃறிணைப் பொருள் எதுவாகட்டும் அனைத்திலும் இறைவன் உறைகிறார். வெவ்வேறு பொருள்களில் பகவான் தன்னை வெவ்வேறு விதமாகப் பல படித்தரங்களில் வெளிக் காட்டிக் கொள்கிறார். வெளித் தோற்றத்தில் அவை வேறுபடினும் அவற்றின் அடிப்படையில் உறையும் ஆன்மா அல்லது உண்மைத் தத்துவம் அவரே என்பதை முதற்கண் அவர் தெளிவுபடுத்துகிறார். இதிலிருந்து என்ன புலனாகிறது? அனைத்தையும் ஆத்ம சொரூபமாக எவன் காண்கின்றானோ அவனே மெய்ஞானி. அத்தகைய ஆன்ம போதம் அடையப் பெற்றவர்க்கே பகவானின் சர்வ வியாபகத் தன்மை நன்கு விளங்கும். இத்தகைய பெருநிலையை அடைந்தவர் ஒரு சிலரே. அத்தகையோர் சதா ஆன்மனிலேயே தியானம் செய்யும் திறம் பெற்றவர். அவர்கள் முதல் தர சாதகர்கள். அந்த நிலையை அடையப் பெறாத ஏனையோருக்காக பகவான் கீழ்க்காணும் பல சுலோகங்களில் தான் எவ்வெவற்றில் எவ்விதம்

(23-ம் பக்கம் பார்க்க)

இது (61 ஸ்லோகம்) முதல் 80 வரை உள்ள 20 ஸ்லோகங்களில் தயாதேவி உலக மக்களுக்குச் செய்யும் உபகாரங்களைப்பற்றி பலவிதமாகப் பேசுகின்றார் ஸ்ரீ நிகமாந்த தேசிகன். ஒவ்வொரு ஸ்லோகத்தையும் விளக்கி அதற்கேற்ற முன்னுரையுடன் முடிவையும் எழுதிச் சுவைக்கலாம். அது ஓர் கடல் போன்ற கட்டுரையாகும். எனவே விரிவை அஞ்சி ஒரு சில ஸ்லோகங்களை மட்டுமே சுவைக்கப் புகுகின்றது இக் கட்டுரை.

பட்டாபிஷேகம் செய்வித்துவிடுகிறாய். பின்பு அவர்கள் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தின் ராஜ குமாரர்களாக ஆகிவிடுகின்றனர். அவர்கள் உணர்ந்தோ உணராமலோ இழைக்கும் தவறுகளையும் ராஜ குமாரர்களை தண்டிப்பதைப் போல் சிறு தண்டனைகள் மூலம் சரிப்படுத்திவிடுகிறாள் தயா தேவி.

பின் என்ன? மோக்ஷம் நிச்சயமே.

இது தயா தேவியின் காரியம்.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் அஸாதாரணக் கொள்கை ப்ரபத்தி மார்க்கம். கர்ம ஞான பக்தி மார்க்



# திருவேங்கடவனின் திருவருள் தேவி

மோக்ஷத்தை விரும்பும் ஒருவன் சாதிக்க வேண்டியவை பல. முதலில் இச்சாத்வேஷங்களற்றவனாக விளங்க வேண்டும்.

ஆசை என்பது ஒரு பெண் பிசாசு. (வேதாளி) ஏன்? அதற்கு எவ்வளவு கொடுத்தாலும் போதாது. இத்தகைய இச்சையையும் இயற்கையில் உடன் பிறந்த த்வேஷங்களையும் ஜெயிக்க வேண்டும். இப்படி ஆன்ம குணங்களை வளர்த்தல் 'யமகியமங்கள்' எனப்படும்.

இதனைச் சாதித்த பெரியோர்கள் (ப்ரத்யாஹாரம், தியானம், தாரணை) இந்திரியங்களை உள்ளிழுத்தல், எண்ணெயொழுக்குபோல் இடைவிடாது தியானித்தல், அத்தியாயனத்தின் போக்கை உள்ளத்தில் சிதறாமல் வைப்பது போன்ற பலப்பல ஸாதகங்களில் ஈடுபடுகின்றனர். தங்களால் இயலாமல் திணறும்போது "மா மேவம் சரணம் கத" என்ற இறைவன் பேச்சை ஆசிரியர்கள் நினைவூட்ட 'ஸ்ரீ நிவாஸனே கதி' என்று உன்னைச் சரணடைய உன்னுள்ளத்தே தயா தேவி நடனமிடுகின்றாள். அவள் வயப்பட்ட நீ ("மோக்ஷயிஷ்யாமி மாசுச:") 'கலங்காதே' என்று மோக்ஷ ஸாம்ராஜ்ய

கங்கள் மிகக் கடினமான வழிகள். பல ஜன்மாக்கள் தொடர்ந்து அநுஷ்டித்தாலும் பலன்கிட்டுமா என்பது ஐயமே.

அகில ஹேயப்ரபத்ய நாயகனாய் ஸமஸ்த கல்யாண குண விசிஷ்டனாய் விளங்கும் ஸ்ரீயப்பதியான பரப்ரும்ஹம் ஸ்ரீமந்நாராயாயணனே. அவன் பரம காருணிகன். அவன் கருணை என்ற தத்துவத்தை தயா தேவியாய் உருவகப்படுத்தி, ராமாநுஜ ஸித்தாந்தத்தையும் பரபத்தி சாஸ்த்திர இலக்கணங்களையும் அறிவுறுத்தும் ஓர் ரஹஸ்யக்ரந்தமாகவே இத்தயாசதகம் அமைந்திருக்கக் காண்கின்றோம்.

இனி இச்சுலோகத்தைக் காண்போம்.

"விவித்ஸா வேதாளீ விகம பரிசுத்
தேபி ஹ்ருதயே
படு ப்ரத்யாஹார ப்ரப்ருதி புடபாக
ப்ரசகிதாஃ
நமந்தஸ் த்வாம் நாராயணசிகரி
கூடஸ்த்த கருணே
நிருத்த த்வத்ரோஹா ந்ருபதி
ஸுத நீதிம் ந ஜஹதி" 62

ஸர்வேச்வரன் பரதந்திரனல்ல. ஒருவரும் அவனைக் கட்டுப்படுத்தமுடி

யாது. இதுதான் பரத்வலக்ஷணம். ஆனால் எவனுவதொருவன் அறிந்தோ அறியாமலோ தனக்கு வேறு கதியில்லை என்று அவன் பாதங்களில் வீழ்வானாகில்...

வீழ்ந்தால் காப்பாற்றுகிறான் என்று எளிதில் முடித்துவிடலாம். ஆனால் இப்படி அவனைச் சரணடையும்போது நிகழ்வதென்ன?

---

திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

---

தயாதேவி ஒரு மின்னலென அவன் திருவுள்ளத்தில் பளிச்சிட்டு அவன் பரத்வத்தையே அழித்துவிடுகின்றாள்.

அது எப்படி?

இல்லாவிடில் தன்னைச் சரண்புகும் மாற்றான் தம்பி, தன் மனைவியை கவர்ந்த கும்பனைச் சார்ந்தவர் என்பதையும் மறந்து அவனுக்கு மகுடம் சூட்டுவானா? "நீ கேட்டபடி உன் அண்ணன் வாலியைக் கொல்லும் ஆற்றல் எனக்குண்டு" என்று காட்ட துந்துபியின் எலும்புக் கூட்டைத் தன் இடது கால் கட்டை விரலால் பல யோசனை தூரம்

உதைத்தெறிந்து, ஒரே பாணத்தால் ஏழு மரங்களைத்தொளையிட்டு வித்தை காட்டுவானு?

இம்மட்டா? அவனுக்காக அவன் குதிரைகளைக் குளிப்பாட்டி, தேரோட்டி, தூதுசென்று, அப்பப்பா, பரம்பொருளை இத்தயா தேவி என்ன பாடுபடுத்தி விளையாடுகின்ருள்!

திருவேங்கடவன் திருவருள்தேவியின் விளையாட்டை இப்படி வியக்கின்ருன்கவி.

எவருக்கும் வசப்படாத அவன் தயைக்கு தாஸ்யனுய் அவள் நோக்கும் சரணுகதனுக்கும் பரதந்திரனுய்விடுகின்ருன். ஸர்வஜ்ஞனை அவன் சரணுகதன் அபசாரங்களைக் கணக்கெடுக்க முடிவதில்லை "நான் தயா தேவியின் தாஸ்யன் "என்று சொல்லிக்கொள்வதில் பெருமையடைகின்ருன்.

எம்பெருமானிடத்தில் தயா தேவி தன் எல்லையை மீறிக்கூட இப்படியெல்லாம் அச்சமின்றி விளையாடுகின்ருள் "வ்யவஸ்தாம் விகடயந்தீ விஹரஸி" என்று முடிக்கின்ருன் இந்த ஸ்லோகத்தை:

"அநந்யாதீந: ஸந் பவதி பரதந்த்ர: ப்ரணமதாம்
க்ருபே ஸர்வத்ரஷ்டா ந கணயதி தேஷமபக்ருதிம்
பதிஸ்த்வத் பாரார்த்த்யம் ப்ரதயதி வ்ருஷ க்ஷ்மாதரபதி:
வ்யவஸ்தாம் வையாத்யாதிதி விகடயந்தீ விஹரஸி" (63)

இத்தயா தேவியின் மற்ருெரு அதிசயமான குணம் இக்கவிஞனை ஈர்க்கின்றது. இவள் வேங்கடவன் திருவுள்ளத்தில் தராதரம் பார்த்துத் தோன்றுவதில்லை. மழை தராதரம் பார்த்தா பொழிகின்றது?

எம்பெருமான் கருணை என்ற இவள் வெள்ளிமென ஓடத்தொடங்கினுல் ஸாம்பள் மேடு எல்லாமே அவ்வோட்டத்தில் மூழ்கி ஒன்ருகிவிடும்.

இதனை எப்படி உணர்கின்ருேம்?

இவள் தோன்றுவதால் ஸர்வேச்வரனுடன் எவை யெல்லாம் இணைகின்றன பாருங்கள்.

ஒரு வேடுவத் தலைவன், அறிவிலி (குகன்) ஒரு குரக்கினத் தலைவன் (ஸுக்ரீவன்) யாரோ ஒரு வேடுவச்சி (சபரி) கந்தை கட்டும் ஓர் ஏழை ப்ராமணன் (குசேலன்) ஒரு கூனப்பெண் (குப்ஜா) இடைப் பெண்கள் (கோபியர்) மாலை கட்டிவிற்கும் ஓர் பூக்காரன் (மாலாகாரர்)

இவர்களெல்லாம் எவ்வளவு சமுதாய கீழ்நிலையிலிருப்பவர்கள்! ஆனுல் அப்பரம்பொருள் உள்ளத்தே இத்தயா தேவி தோன்றிவிடில் அவன் இவர்களையெல்லாம் அணைத்து எப்படியெல்லாம் குலவுகின்ருன்!

இப்படி சமுதாயத்தின் மலைகளையும் மடுக்களையும் தன்னுள்ளே மூழ்கடித்துச் சமனுக்கும் வெள்ளமே தயா தேவி என்று சமுதாய சமதர்ம உணர்ச்சி எழப்பேசுகின்ருன் கவிஞன்.

"நிஷாதநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ
குசேல: குப்ஜா ஸா வ்ரஜ யுவதயோ மால்யக்ருதிதி
அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரி பதேருந்நதிமபி
ப்ரபூதை: ஸ்ரோதோபி: ப்ரஸபமனுகம்பே ஸமயஸி" (65)

ஸ்ரீநிவாசன் கருணை (தயா தேவியின்)வெள்ளமிட்டோடத் துவங்குகையில் உயர்வு தாழ்வு பாராமல் அவனை அடையும் எல்லோரையுமே மூழ்கடித்துவிடுகின்றது என்ற கவிஞன் திருமலையின் காஞறுகளைக் காண்கின்ருன்.

கரை புரண்டோடும் அவ்வருவிகளின் சுழல், கழிவுப் பொருள்களை அடித்துச் செல்லும் வேகம், மேடு பள்ளம் பாராமல் அவை பாய்ந்தோடும் துடிப்பு இவையெல்லாம் அவனுக்கு தயா தேவியை நினைவூட்டுகின்றன. ஏன்? நீராடி எழும் பக்தர்களின் பவித்ர உணர்ச்சியை உணர்கின்ருன் போலும்.

பாபவிநாசனி போன்ற திருமலை தீர்த்தங்களுக்கு தயா தேவியை உவமித்து மகிழ்கின்ருன். "அவ்வருவிகள் உனைப்போன்றது" என்று உவமிக்கவில்லை. பின்-(வ்ருஷசிகரிணை: அநல்பா நிர்ஜர கணு: விகல்பந்தே) திருவேங்கடமலையின் பெரிய அருவிக் கூட்டங்கள் (தே ப்ரவாஹைஹ) உனது கருணை வெள்ளங்களோடு சமமாகக்கருதப்படுகின்றன என்றல்லவா பேசுகின்ருன்.

"ஸ்ரீநிவாஸனையே அழகுபடுத்த வல்ல தயா தேவியே! கலிகாலக் குழப்பங்களால் விளையும் பாப புண்யங்களாகிய கரையை உடைத்துக் கொண்டு, குறைவுபடாமல், (பள்ளம் மேடு பாராமல்) வேற்றுமை காணுது ஓடும் இத்திருமலைக் காஞறுகள் உன்னருள் வேகங்களாகவே கருதப்பட்டு புண்ய தீர்த்தங்களாய் விளங்குகின்றன".

இதோ ஸ்லோகம்:

"கலி க்ஷோபோந்மீலத்க்ஷிதி கலுஷ கூலங்கஷ ஜவை:
அனுச்சேதை ரேதைரவட தட வைஷம்ய ரஹிதை:
ப்ரவாஹைஸ்தே பத்மா ஸஹசர பரிஷ்காரிணி க்ருபே
விகல்பந்தே நல்பா: வ்ருஷசிகரிணோ நிர்ஜ்ஜரகுணு: (69)

இந்த தயா தேவிக்குப் பைத்தியமா என்ன? இவள் உள்ளம் இப்படி மாறிவிட்டதே என்று உலகம் ஆச்சரியப் படுகின்றது. (கிலம் சேதோ வ்ருத்தே: கிமிதம்? இதிவிஸ்மேர புவநம்) இவளுடைய விசித்திர வழிகள் சிங்கமலைப் பிரானுகிய வித்வான் ஸ்ரீநிவாசனுக்கே அதிசயத்தை விளைவிக்கின்றது! (ஸிம்ம க்ஷ்மாப்ருத் க்ருதமுக சமத்கார கரணம்)

அப்படி என்ன செய்கிருள் தயா தேவி?

இதற்கு விடையளிக்கும் பாங்கில் ஒரு பெரும் வே தா ந் த விளக்கம் அமைக்கின்றுன் கவி. இ ச் சொ ற் ருெடர்களைப் பாருங்கள்.

தயா தேவியின் செயல்கள் உலகி னுக்கு ஓர் ஆச்சரியத்தை விளைவிக் கின்றன. 'இது என்ன பைத்தியமா?' என்றுகூட சிலர் பேசுவதுண்டு!

(''கிலம் சேதே வ்ருத்தே: ''கிமித மிதம்'' இதி விஸ்மேர புவநம்'')

உலகம் மட்டுமென்ன! ஜகத்காரண ஞய் எல்லாவற்றையும் அறியும் அச் சிங்கமலை நிற்கும் பரம்பொருள் ஸ்ரீநி வாஸனும்கூட ''இது என்ன? இத் தயா தேவியின் போக்கு விசித்ரமா யுளதே? என்று வி ய க் கி ன் ரு ன். (க்ருபே ஸிம்ஹக்ஷமாப்ருத் க்ருதமுக சமத்கார கரணம்)

அது என்ன? அப்படி தயா தேவி என்ன செய்கிருள்?

இதற்கு விடையளிக்கும் வகையில் இக்கவிஞன் ஓர் மாபெரும் வேதாந்த தத்துவத்தை விளக்கிவிடுகின்ருன்.

வேதங்கள் ஒரு பெ ரி ய நகரம். இறைவனையடைய பேசப்படும் பல மார்க்கங்கள் (கர்ம, ஞா ன, பக்தி மார்க்கங்களே) அ ப் ப ட் ட ண த் து நெடுஞ்சாலைகள். இச்சாலைகள் சில இடங்களில் சந்திக்கின்றன. அந்நாற் சந்திகளே உபநிஷதங்கள். ப்ரும் மத்தைத் தேடியலைந்து வருபவர்கள் இந்நாற்சந்தியில் சேருகின்றனர்.

ஆனுல் பரப்ரும்மம் அங்கு காணப் படவில்லை!

தயா தேவி உட்கார்ந்திருக்கிருள். அவள் பேச்சுக் கொடுக்கின்ருள்.

''என்ன தேடுகிருய்?''

''பரப்ரும்மத்தை''

''உனது பாவ புண்ணியங்களெல் லாம் நசிந்து நீ இப்பொழுது எந்தவித மான ஆனுதி கர்மவாஸனருசிகளின்றி இருக்கிருயா?

(சேதனன் சற்று யோசித்து) ''அந்த நிலை ப்ருமத்தையடைய அவசியமா?''

''வேதங்களாகிய பெரிய சாலைகளை யெல்லாம் கடந்துவந்த உனக்கு இது தெரியாதா? போகட்டும். அப்பர ப்ரம்மத்திடம் ஸமர்ப்பிக்க ஏதேனும் உபகாரம் உளதா?''

சேதனன் தடுமாற்றத்துடன் ''ஒரு கைம்முதலுமில்லையே!''

''பைத்தியமே, இப்படியெல்லாம் வந்தால் பரப்ரும்மம் கி டை த் து விடுமா?''

''பின் என்ன செய்ய வேண்டும் அன்னையே?''

ஆம்! தயாதேவி 'அன்னையே' என்ற குரல் கேட்டு நெகிழ்கின்ருள்; வழி காட்டுகிருள்.

''அசடே, இவ்வுலக மா யை யி னின்று விடுபட ஒரே வழிதானடா உளது உனக்கு. ''மாமவயே ப்ரபத் யந்தே மாயாம் ஏதாம்தரந்திதே'' என்ற அவன் வாக்கைப் ப டி க் க வில்லையா?''

''அப்படியானுல் என்ன செய்ய வேண்டும் தாயே?''

'''நான் போக்கற்றவன். நீ தான் கதி, உனக்கு அநுகூலமாகவே என்று மிருப்பேன்- உன் திருவுள்ளம் கலங் கும்படி ஒன்றும் செய்யமாட்டேன்', என்று கூறி உன் ஆன்ம, ஆன்மீக ரக்ஷணப் பொறுப்பை அவனிடமே விட்டுவிடு.''

''இப்படி ஒரு வழியா? அவன் காப்பாற்றுவாஞ?

''ஸந்தேஹமே வேண்டாம். அவன் காப்பாற்றுவான். இந்த வழிதான் ''பரந்யாஸம்'' என் று பேசப்படு கிறது.

''அப்படியானுல் அவனுக்கு ஏதே னும் கா ணி க் கை ஸமர்ப்பிக்கவும் வேண்டாமா?''

''இதோ இந்தக் கூடையில் உன் பாபங்களையெல்லாம் போடு. ''பரந் யாஸம்'' என்ற இப்போர்வையால் மூடு. போ. அவனிடம் ஸமர்ப்பி. சீக்கிரம்'' என் று பேசிக்கொண்டே தயா தேவி அந்நாற்சந்தியிலிருந்து மறைகின்ருள்.

மறுகணம் இச்சேதனன் அ வ ள் கூறியபடி பரந்யாஸத்தைச் செய் கிருன்.

வெளியில் மறைந்த தயா தேவி ஸ்ரீநிவாஸன் உள்ளத்தே தோன்று கின்ருள்.

சேதனன் காப்பாற்றப்படுகிருன்.

இவ்வளவு நாடகமும் இச்சுலோகத் தின் ஈ ற் ற டி இரண்டிலும் காண் கிரேம்.

''பரந்யாஸச்சந்ந ப்ரபல வ்ருஜிந ப்ராப்ருத ப்ருதாம்'' பரந்யாஸத்தால் மறைக்கப்பட்ட மிக வலிய பாபங் களென்னும் நிவேதனத்தைக்கொண்டு வருபவரை,

''ப்ரதிப்ரஸ்தானம் தே''

என்று எதிர்கொண்டு அ ழை க் கு ம் உன்னை ஓர் பைத்தியம் என்று உலகம் வியக்கின்றது.

''ச்ருதி நகர ச்ருங்காடக ஜுஷு'' வேதங்கள் என் னு ம் பட்டணத்து நாற்சந்தியில்.... இந்நாடகம் நடக் கின்றது.

இனி இந்த ஸ்லோகம் முழுவதை யும் காணுங்கள்.

''கிலம் சேதோ வ்ருத்தேঃ கிமிதமிதி
விஸ்மேர புவநம்
க்ருபே ஹிம்ஹ க்ஷமாப்ருத்க்ருத மூக
சமத்கார கரணம்
பரந்யாஸச்சந்ந ப்ரபல வ்ருஜிந
ப்ராப்ருத ப்ருதாம்
ப்ரதிப்ரஸ்தானம் தே ச்ருதி நகர
ச்ருங்காடக ஜுஷः (70)

(தொடரும்)

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

விளங்குகிறார் என்பதை எடுத்துக் கூறுகிறார். ஆத்மனில் தியானம் செய்ய இயலாதவர்கள் இவற்றில் தியானம் செய்யலாம்.

ஆதித்யானாமஹம் விஷ்ணு:
ஜ்யோதிஷாம் ரவிரம்சுமான் |
மரீசிர் மருதா மஸ்மி
நக்ஷத்ராணாமஹம் சசீ || 21 ||

''ஆதித்தியர்களுள் நான் விஷ்ணு. ஒளி தருபவைகளுள் நான் சூரியன். மருத்துக்களுள் மரீசி. நக்ஷத்திரங்களுள் சந்திரன்.''

பூமியில் எத்தனை எத்தனையோ பொருள்கள் விளைகின்றன. ஆனால் பொருட்காட்சி ஒன்றில் அவற்றில் முக்கியமான சில மட்டுமே வைக்கப்படுகின்றன. ஏன் என பூமியில் விளையும் அத்தனையையும் அங்கே வைக்க முடியாது. அதுபோல இயற்கை முழுவதும் இறைவனே வியாபித்திருக்கிறார். அவற்றில் ஒரு சிலவற்றை மட்டும் எடுத்துக் காட்டாக இந்த விபூதி யோகத்தில் குறிப்பிடுகிறார். இவற்றைத் தியானம் செய்வது இறைவனைத் தியானிப்பதற்கு நிகர்.

பன்னிரண்டு மாதத்திற்குப் பன்னிரண்டு ஆதித்தியர்கள் உண்டு. அவை கிரமமாகக் கீழே தரப்படுகின்றன. சித்திரைக்கு அம்சு, வைகாசிக்கு தாதா, ஆனிக்கு இந்திரன், ஆடிக்கு அர்யமா, ஆவணிக்கு விவஸ்வான், புரட்டாசிக்கு பகன், ஐப்பசிக்கு பர்ஜந்நியன், கார்த்திகைக்கு த்வஷ்டா, மார்கழிக்கு மித்திரன், தைக்கு விஷ்ணு, மாசிக்கு வருணன், பங்குனிக்கு பூஷா. இந்தப் பன்னிருவரில் விஷ்ணு என்னும் ஆதித்தியனுக்குத் தனிப் பெருமை உண்டு. தை மாதத்தில் தான் உத்தராயண புண்ய காலம் பிறக்கிறது. எங்கும் சூழ்ந்திருந்த பனி அகன்று வெப்பத்தை வளர்க்கும் ஆதித்தியன் விஷ்ணு அனைத்து ஆதித்தியர்களிலும் முக்கியமானவராகக் கருதப்படுகிறார். இதையொட்டியே மகர சங்கராந்தி, தைப் பொங்கல் போன்ற விழாக்களும் அந்த சமயத்தில் முக்கியமாகக் கொண்டாடப்படுகின்றன.

'மருத்' என்ற வார்த்தை வாயு தேவதைகளைக் குறிக்கும். மொத்தம் வாயு தேவதைகள் 49 பேர். சிலர் 7 என்பர். அவர்களில் தாம் 'மரீசி' என பகவான் குறிப்பிடுகிறார். காற்று உலக வாழ்விற்கு மிக மிக இன்றியமையாதது அல்லவா!

ஒளி இன்றி நமது வாழ்வே இல்லை. பகலில் நமக்கு ஒளி தருவது சூரியன். இரவில் ஒளி தருவது சந்திரன். ஆதித்தியர்கள் மொத்தம் பன்னிருவர். அப்பன்னிருவரில் சூரியன் முக்கியமானவன். சூரிய ஒளி மனித வாழ்விற்குப் பயிர்களின் வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதது. பூமியில் நிலக்கரி, பெட்ரோல் முதலிய சக்தி சாதனங்களின் தட்டுப்பாடு நிலவும் இன்றைய நிலையில் சூரியனிடமிருந்து அபரிமிதமான சக்தியைப் பெற்று நாம் பயன் பெற முடியும் என இன்றைய விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ளனர். சூரிய அடுப்பு போன்றவையெல்லாம் இதன் விளைவாகக் கண்டு பிடிக்கப்பட்டவையே. சந்திரன் ஒரு நக்ஷத்திரம் அல்ல. இருந்தாலும் சந்திர ஒளியின் முக்கியத்துவத்தை முன்னிட்டு அது நக்ஷத்திரம் என ஈண்டு குறிக்கப்படுகிறது. மூலிகைகளின் வளர்ச்சிக்கு சந்திர ஒளி மிகவும் தேவை. குளிர்ந்த சந்திர ஒளி மனத்திலுள்ள எத்தகைய கவலையையும் போக்கடிக்கும் தன்மையைப் பெற்று விளங்குவதை நாம் அறிவோமில்லையா! அத்தகைய சந்திரனும் சூரியனும் தாமே என்கிறார் பகவான்.

''வேதங்களில் நான் ஸாம வேதம். தேவர்களுள் இந்திரன். இந்திரியங்களுள் நான் மனம். உயிர்களின் உணர்வும் நானே.''—(22)

ருக், யஜுர், ஸாம, அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களில் இசை கூடியிருப்பதால் பொருள் விளங்காதவர்களுக்கும் ஸாம வேதம் உள்ளத்தைக் கவர வல்லதாகிறது. ஸாம கானத்தினால்தான் ராவணேஸ்வரன் சிவபெருமானை திருப்திப்படுத்தினான் என்பர். எனவே வேதங்களுள் ஸாம வேதம் தலையானதாகிறது. இந்திரன் தேவர்களின் தலைவன் எனவே இந்திரனிடம் ஈசுவர சம்பத்து அதிகம் இருக்கிறது என்றாகிறது.

கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து ஆகிய பத்து இந்திரியங்களுக்கும் தலைமை ஸ்தானம் வகிப்பது மனம். மனத்தின் துணையின்றி அவற்றால் செயல்பட முடியாது. உதாரணமாக மனம் எதிலேயாவது மூழ்கியிருக்குமாகில் காது கேட்டாலும், கண் பார்த்தாலும் ஒன்றும் நமக்குப் பொருள்படுவதில்லை. ஏன்? காதும் மனதும் ஒன்றிக்கவில்லை. கண்ணும் மனதும் ஒன்றிக்கவில்லை. எனவே மனம் தான் இந்திரியங்களின் சூத்ரதாரி. மனத்தை அடக்கிவிட்டால் இந்திரியங்கள் அனைத்தையும் அடக்கியதற்கு நிகர். அத்தகைய மனம் பகவானின் விபூதி ஆகிறது.

உடல் அழகாக இருக்கிறது. ஆனால் அதில் உணர்வு இல்லையெனில் அதனால் யாது பயன்? உயிரற்றதற்கும், உயிருடையதற்கும் இடையில் உள்ள வேறுபாடு உணர்வு அல்லது அறிவில்தான் உள்ளது. 'சேதனம்' என்பது அறிவு எனப் பொருள்படுகிறது. அறிவு அதிகரிக்குமளவு தெய்வ சாந்நித்தியம் மென்மேலும் வெளிப்படுகிறது. சூரிய அறிவே தெய்வம் ஆகிறது. இதை அடிப்படையாகக் கொண்டுதான் நாம் காயத்ரி மந்திரத்தில், 'தியோ யோ ந:ப்ரசோதயாத்' என்று பகவானை வேண்டுகிறோம். 'எனது அறிவைத் துலக்கித் தூய்மைப் படுத்துவீராக' என்பது அதன் பொருள்.

'ருத்திரர்களுள் சங்கரனாகவும், யக்ஷரக்ஷஸர்களுள் குபேரனாகவும், வஸுக்களுள் அக்னியாகவும், மலைகளுள் மேரு மலையாகவும் நான் இருக்கிறேன்'—(23)

ருத்திரர்கள் பதினொருவர். பத்து சூக்ஷ்ம பிராணன்களும் மனமும் சேர்ந்து பதினொரு ருத்திரர்களாகின் றன. இந்த ருத்திரர்களின் பெயர் கள் புராணங்களில் பல்வேறு இடங் களில் பல விதமாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. வீரபத்ரன், சங்கரன், கிரீசன், அனகு பாதன், புவனாதிஸ் வரன், அஹிர்புஜன், பிநாகன், அப ராஜிதன், கபாலி, ஸ்தானு, பகன் என்பன அவர்களின் வெவ்வேறு பெயர்களாகும். ருத்திரன் என்ற வார்த்தை 'ருத்' என்ற தாதுவி லிருந்து பிறந்ததாகும். ருத்திரன் என்பது அழச்செய்பவன், ரோதனம் உண்டு பண்ணுபவன் எனப் பொருள் படுகிறது. ராவணன் என்ற சொல் லுக்கும் இதே பொருள் தான்.

ருத்திரனும் உயிர்களை அழச் செய் கிறான். ராவணனும் தன் செயல் களால் ஏனையோரை அழச் செய்தான். வெளிப்படையாகப் பார்த்தால் இரு வரது செயலும் ஒன்றேயாயினும் அவற்றின் நோக்கம் முழுக்க முழுக்க வேறுபட்டதாக அமைகிறது.

கொலைகாரனின் கையில் கத்தி இருக்கிறது. அதைக் கண்டு அனை வரும் தங்களது உயிருக்கு எந்த வேளை யில் தீங்கு நேரிடுமோ என்று பயப் படுகின்றனர். மருத்துவரின் கையில் கத்தி இருக்கிறது. அதைக் கண்டு நோயாளி எந்த விதக் கலக்கமும் கொள்வதில்லை. மாறாக மருத்துவர் கையிலிருக்கும் கத்தியினால் தனக்கு அறுவைச் சிகிச்சை நடக்கப் போகிறது, அதனால் தனது நெடு நாளையத் துன் பம் அகலப் போகிறது என்றறிந்து மகிழ்ச்சி கொள்கிறான். ரண வைத்தி யரும் உடலை அறுத்து அழச் செய் கிறார். முந்தையதால் துன்பம் கூடு கிறது. பிந்தியதால் துன்பம் அகலு கிறது.

ருத்திரன் துன்பத்தைக் கொடுத்து மக்களை அழச் செய்வதன் மூலம் அவர் களைப் பண்படுத்துகிறார். 'வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற வாசகத்தின் உட்கருத்தும் இதுவே. துன்பம் நமக்குப் பாடம் புகட்டுவது போல் இன்பம் புகட்டாது. தீ மென் மேலும் எரிந்து தங்கத்திலுள்ள மாசுக்களை அகற்றி அதைத் தூய் மைப் படுத்துவது போல, துன்பம் நமது மனத்தினைத் தூய்மைப் படுத்து கிறது. தங்களது இளம் வயதில் அதிகம் துன்பப்பட்டோர் பலர் பிற்காலத்தில் நன்னிலையடைந்திருப் பதைச் சரித்திரம் நமக்குப் புகட்டு கிறது. 'சங்கரன்' என்ற வார்த்தை 'மங்களத்தைச் செய்பவன்' என்று பொருள்படும். துன்பத்தின் மூலம் மக்களைப் பண்படுத்துவதால் ருத்திரர் களில் தன்னைச் சங்கரனாகப் பகவான் கூறிக் கொள்ளுகிறார்.

'வித்த' என்றால் செல்வம் என்று பொருள். வித்தேசன் என்றால் செல் வத்துக் கதிபதியான குபேரனைக் குறிக்கிறது. யக்ஷர்கள், ரக்ஷஸர்கள் ஆகியோர் தேவகணத்தைச் சேர்ந் தவர். விரைந்து சென்று பொருளைத் தேடுபவர்கள் யக்ஷர்கள். பொருளைக் காப்பவர்கள் ரக்ஷஸர்கள். இவ்விரு தரத்தாரும் குபேரனுடைய பரிவாரங் களாகின்றனர். இதன் உட்கருத்து யாது? எங்கு உழைப்பும், சேமிப்பும், இருக்கிறதோ அங்கு பொருள் மென் மேலும் சேரும். உழைக்காது பொருள் சேர்த்தல் நியாயமாகாது. அப்படிச் சேர்த்த செல்வம் நில்லாது நீங்கி விடும். லாட்டரிப் பணத்தால் திடீர் லட்சாதிபதியானவர்கள் அதைச் சேமிக்க வழி தெரியாது பெற்றதனைத் தையும் தொலைத்து சிலர் மீண்டும் தெரு வில் திரிவது இதற்குச் சான்றாகும். செல்வம் எவனிடம் சேருகிறதோ அவன் குபேரனாகின்றான். செல்வம் ஈசு வர சம்பத்து ஆகும். அதனால் தான் செல்வத்தை நாம் 'ஐஸ்வர்யம்' என வும் அழைக்கின்றோம்.

வசுக்கள் எண்மர். நிலம், நீர், தீ, காற்று, வெளி, சந்திரன், சூரியன், நட்சத்திரம் ஆகியவை உருவகப் படுத்தப்பட்டு வசுக்கள் என அழைக் கப்படுகின்றன. பிரபஞ்சம் யாவை யும் இந்த அஷ்ட வசுக்கள் தம்முள் அடக்கி வைத்திருக்கின்றன. இதைத் தான் மகாகவி காளிதாசரும் தமது ஒப்பற்ற நாடகமாகிய அபிக்ஞான சாகுந்தலத்தின் நாந்தி (முதல் மங் கள) சுலோகத்தில், ''யா சிருஷ்டி: ச்ரஷ்டுராத்யா விதிஹுதம் ஹவிர்யா ச ஹோத்ரீ............வஸ்தாபி ரஷ் டாபிரீச:'' என்று அஷ்ட வசுக்களு டன் கூடித் திகழும் அந்த ஈசன் நம் மைக் காத்து ரக்ஷிக்கப்படட்டும் எனக் கூறுகிறார். இந்த அஷ்ட வசுக்களில் அக்கினி வெவ்வேறு வடிவில் மக்களைக் காப்பதால் வசுக் களில் நான் அக்கினி என்கிறார் பக வான். புராணங்களில் இந்த அஷ்ட வசுக்கள் ஆப, த்ருவ, ஸோம தார, அனில, அனல, ப்ரத்யூஷ, பிரபாஸ என்ற பெயர்களில் குறிப்பிடப்படு கின்றன.

மலைச் சிகரங்களுள் உயர்ந்தது மேரு வாகும். அது பொன் மயமானது எனப்படுகிறது. ஆன்மீக அடிப்படை யில் சுஷும்னு நாடி மேருமலையுடன் ஒப்பிடப்படுகிறது. தேவர்களனை வரும் மேருவைச் சார்ந்திருப்பது போன்று சரீரத்திலுள்ள இந்திரியங் கள் மற்றும் பிராணன் யாவும் சுஷும்னு நாடியைச் சார்ந்திருக்கின் றன. எனவே இயற்கையின் அமைப் பிலும், உடல் அமைப்பிலும் மேரு மலை முக்கியமான இடத்தைப் பெறு கிறது.

(தொடரும்)

# எண் கணித சோதிடமும்....

# ....அதன் பலா பலன்களும்

பாகம் 11

## எண் எட்டின் தன்மைகளும் கொள்கைகளும்

எண் எட்டைத் தங்கள் எண்ணுய்க் கொண்டுள்ளவர்கள் பொதுவாகவே சோக சுபாவமுள்ளவர்கள். தனிமையில் பரிதவிக்கும் நிலை இவர்களின் தனிப்பட்ட ஏகாந்த நிலை. ஆழ்ந்த மன வருத்தமும் எடுத்ததெற்கெல்லாம் மனக்கிலேசமும் உள்ளச் சோர்வும கொண்டு நடமாடும் அபிமானிகள். தனித்துவம், தானியங்கல், தன் முயற்சி போன்றவற்றின் மூலம் தனித்துச் செயல்பட்டாலும் மற்றவர்களுக்கு இவர்களின் துணிபுகள், செயல்கள், எண்ணங்கள், எழுச்சிகள் எல்லாம் மரண வேடிக்கைத்தனத்தையும், பலத்த வலியையும் தருவன வாகத்தான் இருக்கும். இவர்கள் உள்ளச்சோகம் கொந்தளித்துப் பெருகிவருமாயின் இவர்கள் மத சம்பந்தமான செயல்களில் துணிந்து ஈடுபடலாம். இவர்களின் உணர்ச்சிக் கொந்தளிப்பும், மனக்கிலேசமும் கரை உடைந்து வெள்ளமெனப் பாயுமாயின் 'பித்தர்களாகவும்' வழியுண்டு. இயல்பாக இவர்கள் எதிலும் சிரத்தையற்று, உற்சாகமின்றி, உணர்வின்றி செயல்படுவார்கள். ஆனுல் இவர்கள் வாழ்க்கையில் நசுக்கப்பட்டவர்களைக் கண்டால் துடித்து எழுவார்கள். அப்போது இவர்களுடைய இதயத்தில் புதிய இரத்தம் ஊறும்; அதிகமான மன எழுச்சி கொண்டு, மிகுந்த சிரத்தை கொண்டு ஒடுக்கப்பட்டவர்கள் எந்த மூலையிலிருந்தாலும் அதற்காக வருத்தப்படுவார்கள். 'மகிழ்ச்சி' என்ற சொல்லோ ஒரு அறிகுறியோ இவர்களுக்குத் தெரியுமோ அன்றித் தெரியாதோ என்றெல்லாம் இவர்களைக் காணுந்தோறும் தோன்றும். அப்படியே இவர்களை ஓரளவாவது சந்தோஷப்படுத்த முயற்சித்தாலும் மீண்டும் சோக இரசம் கரை புரண்டு விடும். ஏன்? இப்படி இவர்கள் சதா சோகத்தில் மூழ்கி இருக்கிறுர்கள் என் பதிலேயே நாம் மூழ்குவோமாயின் நம்மையும் துக்க சாகரத்தில் மூழ்கடித்துவிடும் சோக ஞானிகள் இவர்கள். இவர்களின் சோகம் மற்றவர்களுக்கு ( ? ); இவர்களுக்கோ ( , ); அதாவது எட்டாம் எண்தாரர்களை விமர்சித்தல்அவ்வளவு எளிதானதல்ல. விமர்சனத்திற்கெல்லாம் அப்பாற்பட்ட இவர்களின் ஒரு போக்கையும், விமர்சனமெல்லாம் சாதாரணம் இவர்களின்பால் என்னும் மற்ளெரு போக்கையும் கொண்டு எழுத முற்பட்டால் இவர்களின் வழிகளை இரு கூறுக்கிக் காட்டலாம். ஒன்று உலகார்ந்த உண்மை விஷயங்களின்பாற்பட்டது; மற்ளென்று உலகிற்கெல்லாம் விளங்காத ஆன்மீக விஷயங்களினுல் வருவது. உலகார்ந்த விஷயங்களில் இந்த எண்தாரர்களின் நாட்டம் ஆழ்ந்து காணப்படும்போது இவர்களது செயலின் ஸ்திதியில் எழுச்சி, கிளர்ச்சி பீடுறும்; புரட்சி, அராஜகம், நிலையாமை மேல் எழும்பி நிற்கும். மற்றவர்களின் நடைமுறை அத்யாவசத்தில் இவர்களது போக்கு புதிராகி விடும். இவர்கள் ஒரு நேரத்திற்கு ஒரு புத்தி கொண்டிருப்பதால் க்ஷண சித்தர்களாகவும் க்ஷணப்பித்தர்களாகவும் விநோதமாகத் தென்படுவார்கள். ஆன்மீக விஷயங்களில் இவர்களைப் பற்றிப் பிரித்துப் பேசுகையில் இவர்களின் எண்ணம் தத்துவச் சித்தாந்தத்தில் ஈடுபடும்; பூடகார்த்தமான மாயச் செயல்களில் அக்கறையும், போக்கும் காட்டுவார்கள். மத சம்பந்தமான நெறி முறைகளில் தலைமைப் பதவி வகுத்தல், பக்தி, நோக்கங்களுக்கென்று ஆத்மனை ஈடுபடுத்துதல், எந்த நெறி முறைகளையும் கண்டு பயின்று அதனை ஆழ்ந்து சுவைத்தல். பீறிட்டெழும் ஆன்மீக எழுச்சி போன்றவற்றினுல் காட்டும் செய்கைகளை காணுந்தோறும் இவர்களைப் புரிந்து கொள்ளுதல் சாத்தியமில்லை. இருப்பினும் இவர்கள் ஈடுபடும் பல்வேறு நிகழ்ச்சிகளிலும் அழிவூட்டும் தன்மைதான் எஞ்சிநிற்கும்; ஒரு விதமான சாசுவதத்வமும் நிலையற்றுத் தோன்றும்.

திரு. E. S. குமரன்,
294, 1st கிராஸ், தில்லைநகர்,
சேலம்.

## எண்ணைக் கொண்ட தேதிகள்

8, 17, 26, தேதிகளைக் கொண்ட எந்த மாதமாயினும் சரி, அல்லது சனியின் வீடு என்று சொல்லப்படுகிற உச்சகாலக்கட்டங்களான(Saturn +)ன் 21 டிசம்பர் முதல் 26 ஜனவரி வரையிலும் (Saturn —)ன் 26 ஜனவரி முதல் 19-26 பிப்ரவரி வரையிலும் உள்ள நாட்கள்.

## எண்ணின் தேவதை

Saturn (சனி).

## முக்யமான தினங்கள்

சனி, ஞாயிறு மற்றும் திங்கள்.

## முக்யமான தேதிகள்

4, 13, 17, 21, 22, 26, போன்ற



திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# திருமலையிலும் திருப்பதியிலும் தங்கும் வசதிகள்

அநேகத் தர்ம சத்திரங்களை (தர்மசாலை)த் திருப்பதியிலும் திருமலையிலும். திருமலை-திருப்பதி தேவஸ்தானம் கட்டியிருக்கிறது.

திருமலையில் நூற்றுக் கணக்கான அழகிய குடில்கள் (காட்டேஜ்) மிகக் குறைந்த வாடகையில் கிடைக்கின்றன. பாதிப பகுதிக் குடில்களுக்கு வாடகை ரூ. 5/- முதல் ரூ. 9/- வரையில்; முழுக் குடில்வாடகை ரூ. 10/- முதல் ரூ. 16/- வரையில். ஐந்து உறுப்பினர்கள் கொண்ட ஒரு குடும்பம் பாதிப் பகுதிக் குடில்களிலும், 12 பேர் கொண்ட குடும்பம் முழுக் குடிலிலும் வசதியாகத் தங்கலாம்.

இத்தனை வசதிகளுடன் 10,000 முதல 15,000 யாத்திரிகர் வரையில் திருமலையில் தங்கமுடியும். ஆனால் அநேக சமயங்களில் கோயிலைத் தரிசிக்க வரும் பக்தர்களின் எண்ணிக்கை 25,000யும் தாண்டி விடுகிறது. கடைசி நிமிஷததில இடம் கிடைக்காமல் திண்டாடுவதைத் தவிர்க்க, முன் கூட்டியே குடில்களுக்கு ரிஸர்வ் செய்து கொண்டுவிடுமாறு யாத்திரிகரை வேண்டுகிறோம். வரவேற்பு அதிகாரி, திருமலை-திருப்பதி தேவஸ்தானம், திருமலை (போன்: 2571) என்ற விலாசத்துக்கு ஒரு வாரம் முன்பே எழுதி ரிஸர்வ் செய்து கொள்ளவேண்டும். தங்கும் வசதி கோரி எழுதும் எல்லா விண்ணப்பங்களுடனும் ரூ. 20/-க்கு டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ சேர்த்து அனுப்ப வேண்டும். கிடைக்கக் கூடிய தங்குமிடங்களை ரிஸர்வ் செய்து தரப்படும்; அதிகப்படி கட்டணம் திருப்பித் தரப்படும்.

டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ திருமலைக்குக் கிடைத்தவுடன், விண்ணப்பித்தவர்களுக்கு ரிஸர்வேஷன்கார்டு ஒன்று அனுப்பப்படும. தங்குமிடங்களைப் பெற அந்த ரிஸர்வேஷன் கார்டையோ, மணியார்டர் அல்லது டிமாண்ட் டிராப்ட் ரசீதுகளையோ திருமலை விசாரணைக் காரியாலயத்தில் காட்ட வேண்டும்.

பொதுவாக ரிஸர்வேஷன் ஒரு நாளைக்கு மட்டுமே வழங்கப்படும். மேலும் நீடிக்க வேண்டுமானால் தங்குமிடங்கள் கிடைப்பதை அனுசரித்தே கொடுக்கப்படும்; உறுதி கூறமுடியாது.

யாத்திரிகர் தங்கள் உடைமைகளை ஜாக்கிரதையாக வைத்துச் செல்லத் திருமலையிலும் திருப்பதியிலும் தேவஸ்தான 'காப்பு அறை' வசதிகள் உள்ளன. யாத்திரிகர் சமையல செய்ய விரும்பினால் தேவையான பாத்திரங்களைத் தேவஸ்தானத்திலிருந்து குறைந்த டிபாஸிட் கட்டிப் பெறலாம். யாததிரிகர் ரூ. 30/- டிபாசிட் கட்டினால் காட்ரெஜ் பூட்டுகள் கொடுக்கப்படும்.

திருப்தியான தாவர உணவு வகைகளை நியாய விலையில் அளிக்கும் பலஉணவு விடுதிகளைத் திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருமலையில் நடத்துகிறது.

நிர்வாக அதிகாரி,
திருமலை-திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி.

### முக்யமாக வேண்டிய நட்பு

நான்காம் எண்தாரர்களுடன் இருத்தல் நலம்.

### முக்யமான நிறங்கள்

வெளிர் மற்றும் மெல்லிய நிறங்களை அறவே தவிர்க்க வேண்டும். சாம்பல், கருப்பு, கருநீலம், கருத்த ஊதா போன்ற ஆழ்ந்த நிறங்கள் எடுப்புத்தரும். அதாவது கருமை கலந்த புள்ளிகள், கோடுகள் கொண்ட உடைகள் உசிதம்.

### முக்யமான மணிகள் (நகைகள்)

Anethyst என்னும் செவ்வந்திக் கல்லில் மோதிரமோ நகைகளோ அணியலாம். Sapphire என்னும் நீலக்கல்லோ கருமுத்தோ பதித்த நகைகள் உசிதம். கருவைரமணியிலும் ஆபரணங்கள் அணியலாம்; பொதுவாக ஆழ்ந்த நிறங்கள் ஓரளவு சோகத்தை மாற்றலாம்.

### முக்யமான உடைகள்

'Light Colours' கொண்ட உடைகளில் இவர்கள் தங்கள் உடலை எவ்வகையில் நாகரிகம் செய்தாலும் வசீகரமோ, கவர்ச்சியோ சாத்தியப்படாது; எல்லா நிறங்களிலும் Dark-ன் தன்மை குடிகொண்டிருக்க வேண்டும். சாம்பல், கரு ஊதா, கருஞ்சிவப்பு, கருநீலம், கருமை கலந்த இழைகள், புள்ளிகள் ஆங்காங்கே தோன்றினும் பாதகமில்லை மொத்தத்தில் 'Gandy Colour' என்பன இவர்களுக்கு எடுக்காது.

### சங்கீதத்தில்

கோஷ்டி சங்கீதத்தை இரசிக்கவும், இசைக்கவும், பரபரப்பான நாசமூட்டும் உரத்து ஒலியை எழுப்பும் வாத்யங்களை விரும்பவும் செய்யும் இந்த அபிமானிகள், நான்காம் எண்தாரர்களுடன் ஒப்பிடச் சாத்தியமானவர்கள். மெல்லிசை இவர்களைக் கண்டால்

## திருமலைவாசா துயிலெழாய்!

திரு. சி. முருகேசன், B.A., ஊரகம்–கே.ஜி.எப்.

உலகம் அளந்த உத்தமா கோவிந்தா
அலைகடல் மீதமர்ந்த அழகிய திருமாலே
பலர்புகழ் ஞாயிறே பக்தரைக் காப்பவனே
அலர்மேலு மங்கை அமர்தலம் இருப்பவனே !

கோசலைத் திருமகனாய் குவலயத்தில் பிறந்து
வாசமலர் கன்னியர் போற்றிட குழலூதி
பாசமுடன் வளர்ந்தவனே பரந்தாமா முகுந்தா
ஆசையுடன் எழுப்புகிறோம் அன்பாக துயிலெழாய் !

திருமகள் நாயகனே திருமலையி ருப்பவனே
அருள்தரும் வேங்கடவனே அன்பர்க்கு இனியவனே
கருணையாம் கருமுகில் கார்மேனி செங்கண்ணா
கருமுகிலே மழையாகும்; கருணையே நீயாகும் !

நலம்தரும் நாராயணா நல்லவர் உள்ளத்து
வலம் வரும் சுடரொளியே வைகுந்தா மாதவா
நிலம் தரும் பசுமையென நீயிருப்பாய் அச்சுதா
தலம்புகழ் வேங்கடத்து திருமலைவாசா துயிலெழாய் !

பூவையர் போற்றும் பூவைப்பூ வண்ணா
கோவையிதழ் சிவக்க கொஞ்சும் குமரிகள்
பாவையர் இருவர் புகழும் புண்ணியனே
பூவோடு பழம்கொண்டு போற்றிப் புகழ்வோமே !

சிற்றம் சிறுகாலே சேவிக்க வந்துளோம்
நற்றவ புதல்வா நானிலம் போற்றும்
கொற்றலம் இராமனாய் இத்தரணி மீதுதித்தவனே
பொற்றாமரைக் கண்ணா போற்றிட துயிலெழாய் !

அன்பர்க்கு அமுதம் அளித்தவனே நாராயணா
என்றும் அன்பர்க்கு ஏற்றதைச் செய்பவனே
துன்பம் போக்கும் தூயவனே திருமாலே
தென்னிலங்கை வேந்தனை சமர்புரிந்த பெருமாலே !

வெற்றித்தரும் நாராயணா வேதம் அளித்தவனே
கற்றவர் போற்றும் கலியுகப் பெருமாளே
மற்றவரும் ஏற்றும் செங்கண் நெடியோனே
நற்காலைப் புலர்ந்தது நன்முகமலர துயிலெழாய் !

மல்லிகை முல்லை மற்றநல் மலர்களால்
நற்பால் அமுதோடு நாறுமுனை போற்றிடுவோம்
உள்ளத்து அமர்ந்த வேங்கடத்து இருப்பவனே
நல்லவர் போற்றும் நாராயணா மணி வண்ணா !

நற்காலை மலர்ந்தது நாங்களும் வந்துளோம்
பொற்றாமரை அடியை போற்றிப் பாடிட
நெற்றியிலே திருநாமம நன்றாய் அணிந்தவனே
நற்காலையிலே யாவருக்கும் நலம்செய துயிலெழாய் !

திருமாலே போற்றி திருவருள் தருவாய் போற்றி
திருமகள் நாயகா தினகரா போற்றி
கருமுகில்வண்ணா போற்றி கமலக்கண்ணா போற்றி
அருள்தரும் வள்ளலே போற்றி அன்பர்கன்பனே போற்றி !

திருவேங்கடத் தமர்ந்த தெய்வமே உந்தன்
திருவடித் தரிசனம் தந்தால் போதும்
திருவும் அமர்ந்து திருவருள் தந்திடும்
திருமலைவாசா வேங்கடேசா துயிலெழாய் ! துயிலெழாய் ! !

காத தூரம் ஓட வேண்டும். மத சம்பந்தமான பஜனைகள், பக்தி சங்கீத கோஷ்டி கானங்கள் போன்றவற்றை மிகுந்து உற்சாகம் காட்டிக்கூட இரசிப்பார்கள். இவர்களது இசையின் நாட்டத்திலும் ஒருவகை உற்சாகம் சோகரசத்துடன் கூடி உருக்கம் காட்டி, இறுதியில் துக்க வெள்ளத்திற்குத்தான் கொண்டுபோகும். பொதுவாக அபசுவரங்களில் பிறக்கும் உச்சகோஷ்டியில் எழும் இனிமையற்ற சப்தத்தை விரும்புவார்கள்.

## உடற் கோளாறுபற்றி

கல்லீரல் கோளாறு, பித்தப்பைக் கோளாறு, குடற் சம்பந்தமான கோளாறு, கழிவு உறுப்புக்களினால் ஏற்படும் நோய் போன்ற வியாதிகள் இவர்களை எளிதில் மற்ற எண்தாரரைவிட பாதிக்கும். மற்றும் தலைவலி, இரத்த உறுப்புக்களின் வீக்கம், மற்றும் Autoporsoning என்பன அடிக்கடி ஏற்படும். Rheumatism என்னும் கீல்வாயு ஏற்படவும் வழியுள்ளது.

## முக்யமான மாற்றங்கள்

இவர்களது 17,26,35,44,53,62, 71 போன்ற வயதுகளில் உடற் சம்பந்தமான மாற்றங்கள் டிசம்பர், ஜனவரி, பிப்ரவரி மற்றும் ஜுலை மாதங்களில் ஏற்படலாம்.

## எச்சரிக்கை

இவர்கள் தாங்கள் ஏற்று நடத்தும் செயல்களில் ஓரளவேனும் வெற்றி காணுதல் அவசியம். செயல்களைத் தான் நாம் ஆரம்பித்து வைத்து விட்டோமே என்று வீணுயிருப்பின் தொடங்கும் செயல்கள் பயனின்றி விபரீதத்தில் முடியும்போது இவர்கள் பண்படாத புரட்சியாளர்களாகி எழுச்சி கொண்டு ஏதாவது ஒன்றை முரட்டுத்தனமாக செய்து முடிக்க முயற்சிப்பார்களாயின் 'க்ஷண சித்தன் க்ஷணபித்தன்' கதையாய் முடிகின்றன. ஆகையால் மேற்கொண்ட செயல்களின் நன்மை தீமையை அனுசரித்து ஓரளவு முயற்சி செய்தல் அவசியம். தங்களால் முயன்ற அளவு துக்கப்படாதிருத்தல் சுய நம்பிக்கையினால் ஓரளவு மாற்றிக் கொள்ளலாம். மேலும் இறைச்சியை உண்ணக் கூடாது. இனிமையான பழங்களையும், எளிதில் ஜீரணமாகும் உணவுகளை மட்டும் உட்கொள்ள வேண்டும். தனிமை வேண்டற்பாலது தான்; ஆனால் 'Desertive Loneliness' madnessஐ உண்டுபண்ணும்.

## முக்யமான இயற்கை வைத்யம்

பசலைக்கீரை, காரட், வாழைப்பழம், முலாம்பழம், திராட்சை போன்ற பழங்கள், மற்றும் பசும்பால், பாதாமி போன்றன. இறைச்சியைத் தவிர்த்தல் மிகுந்த நலம்; எலுமிச்சை இரசம், ஆப்பிள் போன்றவற்றை அவ்வப்போது உணவிற்குப் பின் சேர்த்தல் நன்று.

## முக்யமான நபர்கள்

பெர்னார்ட்ஷா, மதபோதகர் ஜான் வெஸ்லி, இராணி மேரி போன்றவர்கள் எட்டாம் எண்ணைக் கொண்டவர்கள். (தொடரும்)

நாச்சியார் திருக்கோலம்-திருப்பதி. — திரு. ஏ. கே. இராமானுஜம்–திருப்பதி.



# அனுமன் கதை



## 23. வண்டாக ஆனார்!

**ஸ்ரீராம சரணாம் போஜ மதுபாயித மானஸ**
**லோலல் லாங்கூல பாதேன மமாரா தீந் நிபாதய ||**

*(ஸ்ரீராமருடைய திருவடிகளாகிய தாமரை மலர்களில் தேனைக் குடிக்கும் வண்டு போன்ற நெஞ்சம் உடையவரே! ஆடுகின்ற உமது வாலாகிய அம்பினால் எனது பகைவர்கள் அனைவரையும் அடித்துத் தள்ளுவீராக!)*

—ஸ்ரீஹனுமந் லாங்கூலாஸ்த்ர ஸ்தோத்ரம்.

இராமபிரான் அயோத்தியிலிருந்து சென்றது முதல் இராவணனைக் கொன்று பிராட்டியை மீட்டுக் கொண்டு வந்துகொண்டிருக்கும் செய்திவரை அனுமன் எல்லாவற்றையும் பரதனுக்கு விளக்கமாகக் கூறினான். இலக்குவனைப் போன்று இராமருக்கு அடிமைத் தொழில் செய்யும் பாக்கியம் தனக்குக் கிட்டவில்லையே என்பதற்காகப் பரதன் பெரிதும் புலம்பினான். மறுநாட்காலை பரதன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு இராமபிரானின் வருகையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். எழுபது வெள்ளம் வானர சேனைகளும் இலங்கை வீரர்களும் பிறரும் வருகிறார்கள் என்றால், அவர்கள் வருவதால் தோன்றும் ஓசையை அளவிட்டுக் கூறவும் முடியுமா? ஆனால் அவ்வொலி உடனே பரதனின் செவிகளில் விழாமையால் அனுமன் வார்த்தையில் பரதனுக்கு ஐய மேற்பட்டது. பரதனின் ஐயத்தை அனுமன் பின்வரும் சொற்களால் தெளிவுபடுத்தினான்:

''பெருந்தவமியற்றும் அண்ணலே! பரத்துவாசர் அளித்த விருந்தினால் சேனைகள் அங்கே மயங்கி உறங்கிப் போயிருக்கும். தேன், கிழங்குகள், காய்கள், பழங்கள் முதலியவற்றை அளவின்றி உண்ட அசதியால் வானரங்கள் வாய்திறந்து ஆர்ப்பரிக்கும் ஆற்றலை இழந்து அமைதியாக இருந்திருக்கலாம். எனவே, இராமபிரான் வரமாட்டார் என்று எண்ணவேண்டா. ஒரு கணப்பொழுதில் இராமபிரான் இங்கே வந்து சேர்வதை உன் கண்களால் நீயே பார்க்கப் போகிறாய்!''

இவ்வாறு பரதனுக்கு அனுமன் ஆறுதல் கூறிக் கொண்டிருந்தான். இராமபிரான் குகப்பெருமானோடும் மற்றையோரோடும் பரத்துவாச முனிவரது ஆசிரமத்திலிருந்து நீங்கி அயோத்தி நோக்கிப் புறப்படலானார்.

சற்று நேரத்திற்கெல்லாம் விமானம் தம்மை நோக்கி வருவதைப் பரதனும் அனுமனும் கண்டனர்.

விமானத்தில் வருகின்றவர்களை இன்னின்னாரென்று பரதனுக்கு அனுமன் சுட்டிக் காட்டினான். சீதா ராம இலக்குவரைத் தனித்தனியாகச் சுட்டிக் காட்டினான். இதுவரை அனுமனின் கைகளைப் பற்றியிருந்தான் பரதன். விமானத்தில் இருந்த இராமபிரானைக் கண்டதும் பரதன் அனுமனின் கைகளை நெகிழவிட்டான்; அண்ணலை நோக்கிக் கைகூப்பினான். அப்பொழுது அனுமன் பூமியிலிருந்தும் எழும்பி வானில் பொருந்தி விமானத்தில் வருகின்ற பிரானையும் பிராட்டியையும் கண்டு நீரொழுகும் கண்களுடன் வணங்கி நின்றான்.

---

திரு. மா. சீதாராமன், M.A., BEd.,
பெருங்கட்டூர்.

---

அயோத்தி சென்றதையும், தீயில் விழுவதற்குத் தயாராக இருந்த பரதனைத் தடுத்து நின்றதையும் அனுமன் இராகவனுக்குக் கூறலானான்.

''ஐயனே நான் தங்களின் கட்டளைப் படியே அயோத்தி சென்றேன். செல்லும் வழியில் தங்கள் திருத்தம்பியாராகிய பரதாழ்வாரைக் கண்டேன். அவர் தீயினை மூட்டி வலம் வந்து கொண்டிருந்தார். அத்தீயில் விழுவதற்கும் தொடங்கி விட்டார். அப்போது தங்கள் திருநாமத்தைக் கூறினேன். தங்கள் வருகையைப் பற்றியும் எடுத்துக் கூறினேன். அது கேட்டுப் பரதாழ்வார் தீக்குளித்தலை விலக்கினார். இதனால் உலகங்கள் உய்ந்தன!''

அனுமன் கூறிய இவற்றைக் கேட்டு இராகவர் கூறலானார்:

''தாயினும் அன்புடைய அனுமனே! நாங்கள் முன் பிறவியில் தீவினைகள் பலவற்றைச் செய்து, அனை

ஒவ்வொன்ருக வந்து இப்பிறவியில் எமக்குத் துன்பத்தை விளைவிக்கின்றன. அவ்வாறு எமக்குத் துன்பங்கள் நேரும் போதெல்லாம் நீ வந்து தோன்றி அத்துன்பங்களை நீக்கி எங்களைக் காப்பாற்றி வருகிருய்.

பிராட்டியை அசோக வனத்தில் காப்பாற்றிஞய்! என்னையும் என் தம்பி இலக்குவனையும் போர்க்களத்தில் உயிர் பெற்றெழச் செய்தாய்! இப்போது பரதனையும் காப்பாற்றிஞய்! நாங்கள் செய்த பெருந்தவப் பயனே உன் வடிவத்தில் வந்து நிற்கக் காண்கிறேன்!''

இவ்வாறு கூறிய இராமபிரான் அனுமனுக்குத் தன் அளவு கடந்த நன்றியை வெளிப்படுத்திக் காட்ட விரும்பிஞர். எனவே, தன்னை வந்து இறுகத் தழுவிக்கொள்ளுமாறு இராமபிரான் அனுமனைக் கேட்டுக் கொண்டார். அமரர்களாலும் காண முடியாத ஐயனின் திருமேனியை அனுமன் தன் மார்புறத் தழுவிக்கொண்டான். அனுமன் செய்த புண்ணியத்தை என்னென்பது! பசுதான் பதியைத் தழுவிக் கொள்ளுதல் மரபு. ஆஞல், பதியே வந்து பசுவைத் தழுவி நிற்கும் அற்புதக் காட்சியைக் காண்கிறேம், அனுமரிடத்திலே!

அனுமனும் இராகவனும் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்ட பின்னர் பரதன் இருக்கும் இடம் சேர்ந்தனர். பரதன் அண்ணலின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அன்புக் கண்ணீரை ஆருகப் பெருக்கிஞன். விமானம் கீழே இறங்கியது. நந்திக் கிராமத்தில் இருந்த அன்னையர் மூவரும் பிறரும் பரதனேடும் விமானத்தில் ஏறிக் கொண்டனர். விமானம் அயோத்தி சென்று சேர்ந்தது.

இராமருக்குத் திருமுடி சூட்டும் நாள் குறித்தலில் கால தாமதம் ஏற்பட்டது. தீர்த்தங்கள் குறித்த காலத்தில் வராமையே திருமுடி சூட்டத் தாமதம் என்பதைச் சுக்ரீவன் உணர்ந்து கொண்டான். எனவே, சுக்ரீவன் அனுமனைக் கடைக்கண்ணுல் பார்த்தான். அவ்வளவில் வாயு குமாரன் காற்ருகப் பறந்து சென்ருன்; ஏழ்கடல் நீரையும் அப்பொழுதே கொண்டு வந்து சேர்த்தான்.

இராமபிரானுக்கும் சீதாபிராட்டிக்கும் திருவபிடேகம் நடந்தேறியது. அதன் பின்னர், அலங்காரங்கள் நடைபெற்றன. பின்னர் முடி சூட்டு விழா நிகழ்ந்தது. இராமபிரானும் பிராட்டியும் எழுந்தருளியிருந்த அரியணையை அனுமன் தாங்கி நின்ருன்.

திருமாலின் அவதாரமாகிய இராமபிரானையும், திருமகளின் அவதாரமாகிய பிராட்டியையும் அரியணையில் அமர்த்தித் தன் கைகளால் தாங்கும் பேற்றினை அனுமன் பெற்ருன். சீதா ராம பரத இலக்குவர்க்கு உயிர்தந்த வள்ளலாகிய அனுமன் சீதாராமனைப் பட்டாபி ராமனுக்கியும் பார்த்து மகிழ்ந்தான். இப்புண்ணியம் அனுமனையன்றி வேறு யாருக்குக் கிடைக்கும்?

இராமபிரான் திருமுடி சூட்டி இனிதே காட்சியளித்துக் கொண்டிருந்தார். முடி சூட்டு விழாவுக்கு வந்திருந்தோர் அனைவரும் இரண்டு மாதங்கள் இனிதே அயோத்தியில் தங்கியிருந்தனர்; இராமபிரானின் திருவோலக்கக் காட்சியைக் கண்டு தினமும் இதயங்குளிர்ந்து வந்தனர்.

இராமபிரான் முதலில் அந்தணர்க்குத் தானமளித்தார். பின்னர், அவர்கட்கு வெகுமதிகள் பலவும் செய்தார். சுக்ரீவன் அங்கதன் முதலானேர்க்கு அணிகளும், ஆடைகளும், ஆரங்களும், பிற செல்வங்களும் அளவின்றிக் கொடுத்து அன்பு காட்டிஞர். பின்னர், வாயு குமாரனுகிய அனுமனை மகிழ்வுடனே பார்த்துப் புன்னகைத்

தேவியருடனும், மணவாள மாமுனிகளுடனும் ஸ்ரீரங்கநாதர்-திருப்பதி.
திரு. S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.



தார். அனுமனைக் கண்ட அளவில் இராமபிரான் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. நன்றிப் பெருக் கால் நாத் தழு தழுத்தது.

''வீரனே! சீதை இருக்குமிடம் அறிந்து வந்து என் உயிரைக் காப் பாற்றினாய்! நான் உயிருடன் இருப் பதைக் கூறிச் சீதையின் உயிரை அசோக வனத்தில் காப்பாற்றினாய்! போர்க் களத்தில் மருந்து மலையைக் கொண்டு வந்து என்னையும், என் தம்பியையும், மற்றுமுள்ள கோடிக் கணக்கானோரையும் உயிர் பெறச் செய்தாய்! தீயில் விழுந்து உயிர்விடத் துணிந்த பரதனைக் காப்பாற்றினாய்! நான் திருமுடி சூடும் நாளில் அரி யணையை அன்புடன் தாங்கி நின்றாய்! இத்தகைய உதவிகளைச் செய்பவர்கள் உன்னையன்றி வேறு யாருளர்? வலிமை மிக்க தோளினையுடைய மாருதியே! என்னையே உனக்குப் பரிசாகத் தரு கிறேன். உனக்குத் தரத்தக்க சிறந்த பரிசு வேறு ஒன்றும் காணேன்! எனவே, நீயே வந்து என்னை இறுகத் தழுவிக் கொள்வாயாக!''

அனுமனுக்குத் தரத் தக்க பரிசி லாக இராமபிரானுக்கு எதுவும் தோன்றவில்லையாம்! எனவே, தன்னையே தருவதாகக் கூறுகின்றார். இதனைமுன் கூட்டியே உணர்ந்தவனாய வாலி, ''தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதம்!'' என்று இராம னின் திருநாமத்தைச் சிறப்பித்ததும் இதைக் கருதித் தான் போலும்!

திருமாலாகிய இராமன் தன் திரு மேனியைக் கொடுத்துவிட்டான் எனில், அண்ட சராசரங்கள் அனைத் தையும் கொடுத்ததாகவன்றோ பொருள்! ஆண்டவனை ஆலிங்கனம் செய்யும் பாக்கியம் பிராட்டியார் பெற்றார். அடுத்து அனுமன் பெற் றான். அனுமன் பெற்ற பாக்கியத்தை என்னென்று வியப்பது!

இராமபிரான் இவ்வாறு கூறக் கேட்ட அனுமன் நாணிக்கோணித் தலை வணங்கி, வாய் புதைத்து, ஒரு புறத்தே ஒதுங்கி நின்றான். இராகவன் அனுமனை இனிதுறப்பார்த்து பொன் னணிகளையும், ஆரங்களையும், பட்டா டைகளையும், யானை குதிரை முதலான சேனைகளையும் தந்து மகிழ்ந்தார். பின்னர், இராமபிரான் முத்துமாலை ஒன்றைக் கையில் எடுத்தார். அம் முத்துமாலை கலைமகளால் அருளப் பட்டது. அம்முத்தாரத்தைச் சித் திரத்தையொத்த சீதாபிராட்டியிடம் கொடுத்து, ''இனியவளே! யாரிடம் வீரம் மிகுந்து காணப்படுகிறதோ, யாரைக் கண்டு உன் மனம் மகிழ்ச்சி யடைகிறதோ அவருக்கு இந்த மாலையைப் பரிசாகக் கொடு!'' என்று இராகவர் கூறினார்.

பிராட்டியார் இராகவனின் அனு மதியைப் பெற்று அந்த ஆரத்தைத் தனக்குத் தாயும் தந்தையுமாகக் காட்சி தரும் அனுமனுக்குப் பரிசாகக் கொடுத்து விட்டார். இராமபிரானி டமும் பிராட்டியிடமும் உயர்ந்த

தேவியருடன் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் - ஆனிவார ஆஸ்தானம்-திருமலை.



பரிசில்களை ஒரு சேரப் பெற்ற பெருமை அனுமனுக்கு மட்டுமே யுண்டு.

பின்னர், இராமபிரான் அனுமனை நோக்கி, "நீ விரும்பும் வரங்களைக் கேள்! தருகிறேன்!" என்று கூறினர். அனுமன் இராகவனை அன்புடன் வணங்கி, "ஐயனே! என் இதயத்தில் தாங்கள் பிராட்டியாருடன் எப்பொழுதும் நீங்காதிருத்தல் வேண்டும். தங்களின் திருநாமத்தையே சதா என் நா உச்சரித்துக் கொண்டிருக்க வேண்டும். தங்களின் திருக்கதை எங்கெங்கே சொல்லப்படுகிறதோ அங்கெல்லாம் நான் அமர்ந்து அக்கதையினைக் கேட்டு ஆனந்திக்க வேண்டும். இவையே நான் தங்களிடம் வேண்டிப் பெற விரும்பும் வரங்கள்!" என்று கனிவுடன் கூறினன்.

அனுமன் வேண்டிய வண்ணமே ஐயன் அனுக்கிரகம் செய்தார். எந் நாளும் இனிது வாழும் சிரஞ்சீவித்து வமும் அருளினர்.

பிராட்டியார் தந்த முத்தாரத்தை அனுமன் தனியாக ஓரிடத்தே இருந்து கொண்டு அதனை உற்றுப் பார்த்தார். சீதா பிராட்டியார் தந்த அம்முத்தாரத்தில் கோக்கப்பட்டிருந்த முத்துக்கள் ஒவ்வொன்றையும் தனித் தனியே நோக்கினர். அம்மாலையிலிருந்த முத்துக்களில் ஒன்றைத் தனியே எடுத்தார். அதனை வாயினல் கடித்து உடைத்துப் பார்த்தார். அவர் மனத்துள் என்ன நினைத்தாரோ உடைத்த முத்தை வீசியெறியலானர். இறுதியில் அன்னையார் தந்த மாலையில் ஒரு முத்துகூட எஞ்சி நிற்கவில்லை. இதனைக் கண்டு அவையோர் அனைவரும் ஆத்திர முற்றனர்.

"பிராட்டியார் அன்பளிப்பாக மனமுவந்து தந்த மாலையின் பெருமையை அனுமன் அறியவில்லையே! குரங்குப் புத்தி என்கிருர்களே! சரியாகத் தானே இருக்கிறது! அன்னையார் அளித்த மாலை, குரங்கின் கைப்பூமாலையாக அ[illegible] தே!" என்றெல்லாம் பலரும் பலவாருகப் பேசலாயினர். சுக்ரீவன் முதலானேர் அனுமரின் செய்கையை வெளிப் படையாகவே கண்டித்தனர்.

இவற்றையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த அனுமன் பதில் கூறலானர். "அன்பர்களே! பிராட்டியார் தந்த மாலையை நான் அலட்சியம் செய்யவில்லை. என் அன்னை தந்த அன்புப் பரிசல்லவா அது! அம்மாலையிலுள்ள முத்துக்களின் உள்ளே என் ஐயனின் வடிவம் காணப்படுகிறதா என்று ஆராய்ந்து பார்த்தேன். ஒரு முத்தில் கூட ஐயனின் உருவம் காணப்படாததால் எல்லா முத்துக்களையும் உடைத் தெறிந்தேன். இதுவே என் செயலுக்குக் காரணம்!" என்று அனுமர் கூறிய பதிலைக் கேட்டு ஒரு சிலர் வியந்து நின்றனர். "பிராட்டி அணிந்த முத்துக்களில் கூடவா இராம பிரானின் உருவம் தெரியக் கூடும்?" என ஒரு சிலர் அனுமனைக் கிண்டல் செய்தனர்.

எள்ளி நகையாடுவோரின் கொட்டத்தை அடக்க எண்ணினர் மாருதி! "எளியவனுகிய என் இதயத்திலேயே சீதாராமன் எழுந்தருளியிருக்கும் போது பிராட்டியார் மாலையில் ஏன் இருக்கக் கூடாது? என்றுதான் எண்ணினேன். என் இதயத் தெய்வத்தைப் பாருங்கள்!" என்று அனுமார் தன் மார்பைக் கிழித்துக் காட்டினர். அனுமரின் இதயத்துள்ளே பிராட்டியும், பெருமாளும் எழுந்தருளியிருப்பதை அனைவரும் கண்டனர். அனுமரின் பக்தியை அனைவரும் வியந்தனர். பின்னர் இராமபிரான்.

ஜாம்பவான், கேசரி, நீலன், சதவலி, நளன், குமுதன், தாரன் முதலான வானரத் தலைவர் பலர்க்கும், அறுபத்தேழு கோடி வீரர்கட்கும் அன்புப் பரிசில் தந்தார்; குகப்பெருமானுக்குப் பொன்னும், மணியும், பட்டாடையும் பிறவும் தந்து விடையும் தந்தார்.

அனுமனைப் பிரிதல் இராகவருக்கு இயலாததாக இருந்தது. இலங்கையை ஆண்டு வரும் விட்டணனுக்குப் பாதுகாவலாக இருந்து உதவி செய்யுமாறு இராமபிரான் அனுமனைக் கேட்டுக் கொண்டார். இராகவர் அனுமனுக்குப் பிரியா விடை தந்து அனுப்பினர். பின்னர், இராமபிரான் 11,000 ஆண்டுகள் இனிதே ஆட்சி செய்து வந்தார்.

இராமபிரானை இறுகத்தழுவப் பெற்றும், சீதா ராமரிடம் சிரஞ்சீவித்துவம் பெற்றும் சிறப்புற்று விளங்கும் சீதாராம பக்த அனுமனை இனி 'அனுமன்' எனக் குறிப்பிடாமல், 'அனுமர்' என்றே மரியாதையுடன் அழைப்போமாக!

அனுமர் நெஞ்சில் இராம நாமமே நிறைந்திருந்தது, விழித்திருக்கும் போதும், உறங்கும் போதும் அவர் வாய் 'இராம! இராம!' என்றே முணுமுணுத்தது. இராமபிரான் சீதையுடன் அனுமர் இதயத்தில் எப்போதும் வீற்றிருக்கலானர்.

இராகவர் முன்பு வேண்டிக் கொண்ட வண்ணம் இலங்கையை ஆண்டு வரும் விபீடணனுக்குக் காவலாக இருக்கச் சேதுவை அடைவார். சில சமயம் மேருமலையைச் சார்ந்து அருந்தவம் இயற்றுவார். சேதுவில் நீராடி இராம நாமத்தைச் செபித்த வண்ணம் தியானத்தில் ஆழ்ந்து விடுவார். இராமாயணச் சொற்பொழிவு எங்கெங்கே நிகழ்கிறதோ, அங்கெல்லாம் சென்று இராமபிரானின் சரிதம் கேட்டு உள்ளம் குளிர்வார். சிரஞ்சீவித்துவம் பெற்றதால், என்றும் அழியாது வாழ்ந்து வரலானர்.

இவ்வாறு, அனுமார் இராமபிரான் திருவடியைத் தியானம் செய்வதையே பெரும்பேருகக் கருதி வந்தார். இராகவனின் திருவடிகளாகிய தாமரை மலரில் உள்ள தேனைக் குடிக்கும் வண்டாக மாறி, அனுமார் இராமபக்தியில் ஆழ்ந்து பேரின்பம் துய்த்து வரலானர். (தொடரும்)

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

பாடும் மதுரபாவம்—தமிழ் அகப் பாடல் முறை—அவர் பாடல்களில் சிறப்புற்றுத் திகழ்வதுபோல வேறு பிறர் பாடலில் இல்லை என்பது அறிய வேண்டிய ஒன்றாகும்.

பொதுமை நோக்கு :

இராமகிருஷ்ணர் காட்டிய சமயப் பொது நோக்கு தனிப்பட்ட சிறப்பினது. அவர் எல்லா நெறிகளையும் அனுட்டித்துப் பார்த்து அவ்வவற்றின் உச்ச நிலையை அடைந்து பின் பேசுகின்றார். அல்லாவையும் ஏசுநாதரையும் அவர் தம் கடவுளாக எண்ணி அனுட்டானம் பழகி அதன் மூலம் முடிநிலை எய்தினராம். மலை முடியில் இருக்கும் ஒருவர்க்கு அம்மலையை நோக்கிவரும் பல வழிகளும் தனித் தனியே அதன் உச்சியை அடையும் வழிகளே என்பது தெளிவாகத் தெரியும். அடிவாரத்தில் நிற்பவர் தம் வழியே ஒரே வழி சிறந்த வழி என்று எண்ணவும் எடுத்துரைக்கவும் வாய்ப் புண்டு அன்றோ. ஒரு தாய் தன் பல குழந்தைகட்கும் அததற்கு ஏற்றவாறு அரிசியை கஞ்சியாகவோ உணவாகவோ, வேறு வகையாகவோ கொடுத்து அவற்றினை உண்பித்தல் போல இறைவனும் உலகினர்தம் உள்ளப்பாங்கிற்கு ஏற்பப் பல சமய நெறிகளை அமைத்துள்ளதாக பகவான் பேசுகின்றார். சடகோபரும்,

"வணங்கும் துறைகள் பல பலவாக்கி
மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பல பலவாக்கி
அவை அவைதோறும்
அணங்கும் பல பலவாக்கி நின்
மூர்த்தி பரப்பி வைத்தாய்
இணங்கும் நின்றோரை இவ்வாய்,
நின்கண் வேட்கை எழுவிப்பனே"
(திருவிருத்தம்—97)

என்று பாடுவது அதுவே தானேயன்றோ? அவரே,

"அவரவர் தமதமது அறிவறி வகை
வகை
அவரவர் இறையவர் என அடி
அடைவர்கள்"—(திருவா-1-1-5)

என்பதும் காண்க.

சமயப் பொதுமை காணலே இந்த இருபதாம் நூற்றாண்டின் சிறப்பு; மற்றெதையும் உலகு இன்று ஏற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை என்பது நாம் கண்கூடாகக் காண்கிறோம். அதே சமயத்தில் ஒரே இறைவனையே வழிபடல் வேண்டும்; எல்லாம் ஒன்றே என்று மேற்போக்காகப் பக்தி இன்றிப் பேசும் பேச்சை இருவரும் ஒருப்படுவாரல்லர். ஒவ்வொருவரும் தாம் வணங்கும் ஒரு மூர்த்தியிடம் பற்றுவைத்து உறுதியாக நிற்றல் வேண்டற்பாலதென்பதனைச் சடகோபர்,

"நும் நும் இட்டா தெய்வம்
எத்தினால்
செம்மின் சுடர்முடி என்
திருமாலுக்குச் சேருமே"
—(திருவா-3-9-6)

என்ற பாடலில் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

சாதி வேறுபாடு பாராட்டாமை :

இராமகிருஷ்ணர் தம் இளமைப் பருவத்தில் தாம் உயர் குலத்தில் பிறந்தவர் என்ற ஆணவம் கூடாது என்பதனை உணர்ந்து நள்ளிரவில் ஒருவரும் அறியாதவாறு ஹரிஜனங்கள் வாழும் சேரிக்குச் சென்று தம் பூநூலை நீக்கிவிட்டு அவ்விடத்தினைத் தூய்மை செய்ததாக அவர் வரலாறு தெரிவிக்கின்றது. அவர் இதனை உபதேசம் செய்யவில்லை. செயலால் காட்டினார். வேறு சில நிகழ்ச்சிகளும் இதனை உறுதிப்படுத்தும் வகையில் அவர் வாழ்வில் நிகழ்ந்ததுண்டு.

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாள சண்
டாளர்களாகிலும்"—(3-7-9)

அவர்கள் திருமால் அடியவராயின் அவரே எமக்குத் தலைவர் என்று சடகோபர் பாடுவர். பக்தி ஒருவனை உயர்த்தும்; பிறப்பன்று என்பதே அவர் கொள்கை.

மக்கள் நலம் பேணல் :

இராமகிருஷ்ணர் ஒரு சமயம் காசி யாத்திரை செல்லுகையில் பல ஏழை மக்களைக் கண்டு மிக வருந்தியதாகவும் அவர்களை அந்நிலையில் விட்டுவிட்டுத் தாம் காசி செல்ல விரும்பவில்லை என்று அறிவித்துவிட்டதாகவும் ஒரு நிகழ்ச்சி அவர் வரலாற்றில் உண்டு. அவ்வெளியோர் உதவிபெற்ற பின்னரே அவர் தம் புனித யாத்திரையைத் தொடர்ந்தாராம்.

அதே போன்று கடவுள் அன்பிலேயே மூழ்கித் திளைத்த சடகோபரும் இறையடியவர் உலகெங்கும் பரவியுள்ளார் என்று மகிழ்ச்சி தெரிவிக்கின்றார். எதற்காக அவர்கள் பரவியுள்ளனர் என்று கேட்டால்,

"கொன்று உயிர் உண்ணும் வியாதி
பகை பசி தீயனவெல்லாம்
நின்று இவ்வுலகில் கடிவான்
நேமிப்பிரான் தமர் போந்தார்"
(5-2-6)

என்று பதில் தருகின்றார். கொடிய நோய், கடும்பகை, தீய பசி முதலாய கொடுமைகளை உலகினின்று ஒழிப்பதே சமய அறிஞர் செயல் என்று அறிவிக்கின்றார். இன்று இராமகிருஷ்ணர் அருட்பணி மன்றம் செய்து வருவதும் இப்பணிதானேயன்றோ?

இவ்வாறு இவ்விரு சான்றோர் வாழ்விலும் வாக்கிலும் காணும் ஒருப்பாடுகளை உணர்ந்து சமயப் பொறுமை கொண்டு நாட்டில் தீயவற்றை நீக்க முயலுதலே நன்னெறி—சமய நெறி. 'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்ற ஔவை வாக்கு முக்காலும் உண்மையாகும். ■

ஸ்ரீகுமார வரதாசார்யேண க்ருதம்

# ஸ்ரீமத் வேதாந்ததேசிக மங்களாஶாஸநம்

*[இது ஸ்ரீ தேஸிகன் திருக்குமாரரான வரதாசார்யரால் அருளிச் செய்யப்பட்டது. 13 ஸ்லோகங்கள்கொண்டது. ஸ்ரீதேஸிகன் விஷயமான மங்களாஸாஸநமாக அமைந்துள்ளது. ஸ்ரீ வரதாசாரியர் தமக்கு சகலமும் தம்முடைய திருத்தகப்பனாரான ஸ்ரீ தேஸிகனிடத்திலேயே கிடைக்கப் பெற்றது என்று அருளிச்செய்கிறாரிதில். மேலும் ஸ்ரீஸ்வாமியின் திருவவதாரம், வம்ஸம், காலக்ஷேபாதிகள், ப்ரவசநங்கள் இவற்றினைப் பரக்கப் பேசுகிறார். இதை அநுஸந்திப்போருக்கு ஸகல மங்களங்களும் உண்டாகும் என்று பலத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறார்.]*

அனுப்பியவர் : ஏ. கே. ராமாநுஜம்–திருப்பதி.

*ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ |*
*வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ||*

*ஸ்ரீமல்லக்ஷ்மண யோகீந்த்ர ஸித்தாந்த விஜயத்வஜம் |*
*விஸ்வாமித்ர குலோத்பூதம் வரதார்யமஹம் பஜே ||*

*ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ராய ஸிம்ஹாய கவிவாதிநாம் |*
*வேதாந்தாசார்யவர்யாய வேங்கடேஸாய மங்களம் ||*

*நபஸ்யமாஸி ஸ்ரோணாயாமவதீர்ணாய ஸூரயே |*
*விஸ்வாமித்ராந்வயாயாஸ்து வேங்கடேஸாய மங்களம் ||*

*பிதா யஸ்யாநந்தஸூரி: புண்டரீகாக்ஷ யஜ்வந: |*
*பௌத்ரோ யஸ்தநயஸ்தோதாரம்பாயாஸ்தஸ்ய மங்களம் ||*

*வேங்கடேஸாவதாரோऽயம் தத்கண்டாம்ஸோऽதவா பவேத் |*
*யதீந்த்ராம்ஸோऽதவேத்யேவம் விதர்க்யாயாஸ்து மங்களம் ||*

*ஸ்ரீபாஷ்யகார: பந்தாநமாத்மநா தர்ஸிதம் புந: |*
*உத்தர்த்துமாகதோ நூநமித்யுக்தாயாஸ்து மங்களம் ||*

*யோ பால்யே வரதார்யஸ்ய ப்ராசார்யஸ்ய பராம் தயாம் |*
*அவாப்ய வ்ருத்திம் கமித: தஸ்மை யோக்யாய மங்களம் ||*

*ராமாநுஜார்யாதாத்ரேயாந்மாதுலாத் ஸகலா: கலா: |*
*அவாப விம்ஸத்யப்தே யஸ்தஸ்மை ப்ராஜ்ஞாய மங்களம் ||*

*ஸ்ருதப்ரகாஸிகா பூமௌ யேநாதௌ பரிரக்ஷிதா |*
*ப்ரவர்த்திதா ச பாத்ரேஷு தஸ்மை ஸ்ரேஷ்டாய மங்களம் ||*

*ஸாம்ஸ்க்ருதீபிர்த்ராமிடீபி: பஹ்வீபி: க்ருதிபிர்ஜநாந் |*
*யஸ்ஸமுஜ்ஜீவயாமாஸ தஸ்மை ஸேவ்யாய மங்களம் ||*

*ய: க்யாதிலாப பூஜாஸு விமுகோ வைஷ்ணவே ஜநே |*
*க்ரயணீய தஸாம் ப்ராப்த: தஸ்மை பவ்யாய மங்களம் ||*

*யஸ்மாதேவ மயா ஸர்வம் ஸாஸ்த்ரமக்ராஹி நாந்யத: |*
*தஸ்மை வேங்கடநாதாய மம நாதாய மங்களம் ||*

*பித்ரே ப்ரஹ்மோபதேஷ்ட்ரே மே குரவே தைவதாய ச |*
*ப்ராப்யாய ப்ராபகாயாஸ்து வேங்கடேஸாய மங்களம் ||*

*ய: க்ருதம் வரதார்யேண வேதாந்தாசார்ய மங்களம் |*
*ஆஸாஸ்தேऽநுதிநம் ஸோऽபி பவேந்மங்களபாஜநம் ||*

தொடர் கட்டுரை :

# தில்லையில் நந்தனாரும் குலசேகரரும்

பகுதி — 2

## குலசேகர மன்னன்

### இறைவனிடம் சரணம் :

இதுவரை திருநாளைப் போவான் என்றழைக்கப்பட்ட நந்தனாரைக் கண்டோம். இனி, நாளைப் போவோம் என்ற அவாக்கொண்டிருந்த குலசேகர மன்னனை அணுகுவோம். இறைவனைச் சரணமாக அடைந்த குலசேகர மன்னனுடைய வாழ்க்கை அன்பு மயம் ஆகிவிடுகிறது. அன்பு மயமான வாழ்க்கை இன்ப மயமானது. இறைவனைச் சரணமாக அடைந்து வாழும் அடியார்கள் அவன் அடி சார்ந்தவர்கள் என்று போற்றப்படுவர். அந்த அடியார்களில் குலசேகரரும் முக்கியத்துவம் அடைந்தவர். அரங்கன் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு இருப்பதே நாவின் பேறு எனக் கருதினார். இனி அவருடைய வாழ்க்கைச் சித்திரத்தைக் காண்போம்.

### தந்தை தாய்

மலைவளம் நிலவளம் நீர்வளங்கள் கொண்ட சேரநாட்டின் தலைநகராம் கொல்லி நகர். அந்நகரை ஆண்டு கொண்டிருந்த வஞ்சி வேந்தனை திடவிரத பூராஜதேவனுக்கும் ராணி நாத நாயகிக்கும் பிறந்த செல்வப் புதல்வன் நம் குலசேகரன்.

### கசடறக் கற்ற கல்வி

குலசேகரருக்குக் குரு முகமாகக் கல்வி கற்பிக்க தந்தையர் ஏற்பாடு செய்தனர். திருக்குமரன் இதிகாச புராணங்களையும் வேத வேதாந்தங்களையும் கசடறக் கற்றார். தாம் கற்ற நூற் பொருள்களை ஞான ரூபமாகக் கிரகித்துத் தமது பக்தி யுள்ளத்திலே ஆழமாகப் பதித்துக் கொண்டார்.

### நல்லாட்சி

யௌவனம் வந்து விட்டதால் திருமணஞ் செய்ய ஏற்பாடுகள் செய்தனர் பெற்றோர். திருமண விழாவுடன் முடிசூட்டு விழாவையும் நடத்தி வைக்க விரும்பினார் தந்தையார். ரூப சௌந்தரியமும் குண சௌந்தரியமும் உள்ள ஓர் அரசிளங்குமரியை மணந்து கொண்டு, அவளுடன் அரியணை அமர்ந்து ராஜ்ய பரிபாலனம் செய்யத் தொடங்கினார்.

### அரங்கனிடம் காதல்

இவ்வாறு இருக்கையில் திருவரங்கத்திற்குச் செல்ல வேண்டும் என்ற அவா ஏற்பட்டது. அணி அரங்கனைச் சேவித்த அடியார்கள் திருக்கூட்டம் இவரை அணுகவே, அவர்களை அன்புடன் எதிர் கொண்டு சென்று அவர்கள் பாதார விந்தத்தில் அடிபணிந்து எழுந்து அவர்களை நோக்கித் தானாகிய 'அடியேனை ஆண்டிடுவீர்' என்று வேண்டிக் கொண்டார். குலசேகர மன்னன் பக்தி வெள்ளத்தில் ஊன்றின காட்சியை அடியார்கள் கண்டு, ஆனந்த மேலீட்டினால் அரசரைத் தொழுது, முக மலர்ச்சியுடன் சம்பிரதாய ரகசியங்களான பல உண்மைகளை எடுத்துரைத்தார்கள். முதலாழ்வார்களுடைய கீர்த்திகளையும், திருமழிசைப் பிரானின் பக்தி அநுபவங்களையும், தொண்டரடியன் பூமாலைத் திருமாலைத் தொண்டினையும் குறித்து அவர்கள் பாடப் பாட குலசேகர மன்னன் மனம் பூரித்தது. இவருடைய பாக்கியவசத்தால் இவரைத் தேடி வந்து, 'ஞான அரசராக நீவீர் விளங்குவீர்' என்று மனங்குளிர வாழ்த்திச் சென்ற அடியரை நினைக்க நினைக்க குலசேகரர் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியது. திருப்பாணருக்கு உகப்பான, அமலன், விமலன், நிமிலன், நீதிவானவன் என்ற சொற்களைத் தாமும் வாய் குளிரச் சொல்லி குலசேகரர், திருவரங்கம் மேயான் திசை நோக்கித் தொழுதார்.

ஸ்ரீரங்க மான்மியத்தைக் கேட்ட பிறகு, ஸ்ரீரங்க யாத்திரை செய்ய வேண்டுமென்று பேரவாக் கொண்டார். அடியார்கள் சென்ற மறுநாளே ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட ஆயத்தமானார். ஆனால் அரசு வேலைகள் மும்முரமாயிருந்தன. பல அடியார்கள் திருக்கூட்டமும் சரமாரியாக வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு உணவளிக்கும் பணியில் ஈடுபட்டார் பக்தர் பெருமான். மறுநாள் புறப்படுவோம் என்று பிரயாணத்தை ஒத்தி வைத்தார். எனினும் பிராணப்படும் சமயத்தில் வேறொரு திருக்கூட்ட மடங்கிய பாகவதர்கள் பெருந்திரளாய் வந்து சேர்ந்தனர். அவர்களை ஆராதிக்கும் கடமையைச் செய்துவிட்டு அடுத்த நாள் நிச்சயமாகப் புறப்படவேண்டும் என்று எண்ணமிட்டார். இப்படியே ஸ்ரீரங்க யாத்திரத் தடைப் பட்டுக்கொண்டே வந்தது. அரசரோ, 'நாளைப் போவோம், நாளைப் போவோம்' என்று நம்பிப் பல நாட்கள் கழிந்தன.

டாக்டர், G. T. கோபாலகிருஷ்ண நாயுடு,

### திருநாளைப் போவார் இருவர்

குலசேகர மன்னன் அரசு அலுவலில் ஈடுபட்டும், பக்தர்கள் பெருங்கூட்டத்தை அவ்வப்பொழுது வரவேற்கும் பணியில் இருந்ததால் நாட்கள் பல கழிந்தன. உயர் குலத்தில் அவதரித்த குலசேகர மன்னனும், தாழ் குலத்தில் புலைப்பாடியில் பிறந்த நந்தனாரும் 'நாளைப்போவோம்' என்ற திருவாக்குடன், முறையே ஸ்ரீரங்கநாதனிடமும் தில்லைச்சிதம்பர நாதனிடமும் மனக் காதல் கொண்டனர். இருவரும் பக்திக் காதலில் ஈடுபட்டு, ஒரே சமமான நிலையில் அமர்ந்த அமைப்பு யாவருக்கும் கிட்டுவது அரிது.

(தொடரும்)

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

லும் பரிவாரங்களைப் போல் இவையும் அறிவுணர்வுடன் கனவுலகில் சஞ்சரிக்கின்றன.

இம்மனிதன் ஆழ்ந்த நித்திரையில் இருக்கும்போது, அவனுடைய இந்த அறிவுணர்வு வெளியுலகிலுள்ள எதைப் பற்றியுமோ அல்லது கனவு எதைப்பற்றியுமோ உணராது, ஒய்வுற்றுள்ளது. உடலில் உள்ள ஹிதம் எனப்படும் எழுபத்து இரண்டாயிரம் நரம்புகளினின்றும் எல்லா உணர்வுச் சக்திகளையும் உள்ளிழுத்துக்கொண்டு இதய வெளியில் ஓய்வெடுத்துக்கொள்கிறது. பேரரசனைப் போலவோ, அந்தணப் பெருமகனைப் போலவோ, அல்லது இளைஞனைப் போலவோ எவ்விதக் கவலையுமின்றி அவன் உறங்குகிறான். அப்போது தூய அல்லது முழு ஆனந்தத்துடன் அவன் இருக்கிறான். அவன் விழித்துக் கொள்ளும்போது அவனுடைய அறிவுணர்வு திரும்பி, முன் போலத் தனது அலுவல்களைத் தொடங்குகிறது.

இந்த அறிவுணர்வே பிரம்மம் அல்லது பரம்பொருள். சிலந்தியின் உடலிலிருந்து வரும் இழையைப் போலவும், தீயிலிருந்து கிளம்பும் பொறிகளைப் போலவும், முதற்பொருளான இந்தப் பரம்பொருளிலிருந்தே எல்லா உணர்வுகளும் உலகுகளும் எல்லாத் தேவதைகளும் எல்லா உயிர்களும் பொருள்களும் தோன்றுகின்றன. இந்த ரகசியமே உண்மையின் உண்மை, பேருண்மை''

இவ்விளக்கத்தைக் கவனத்துடன் கேட்ட பாலாகி தமது அறிவு எவ்வளவு குறைவானது என்பதை அறிந்து வெட்கமடைந்தார். தமது தற்பெருமையையும் வீண் செருக்கையும் விட்டுவிட்டு, கற்றது கைம்மண்ணளவு கல்லாதது மலையளவு என்பதன் உண்மையை நன்கு உணர்ந்தார். ★




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

## ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள் | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொறுவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் இலங்கை ஜனாதிபதி

இலங்கை ஜனாதிபதி திரு. ஜே. ஆர். ஜெயவர்த்தனே அவர்கள் தன் குடும்பத்தாருடன் திருமலைக்கு 8-11-78 அன்று வருகை புரிந்தார். திருப்பதியில் அவர்களை, ஆந்திர மாநில அறநிலையத் துறை அமைச்சர் மற்றும் உள்ளூர் பிரமுகர்களும் அன்புடன் வரவேற்றனர். அன்று காலை 11மணி அளவில் திருமலைக்கு வருகை புரிந்த ஜனாதிபதி அவர்களை, தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், உதவி செயலாட்சித் தலைவர் திரு. நரசிம்மா ராவ், அறநிலையத் துறை உதவி ஆணையர் திரு. பி. ஆனந்தராவ் முதலியார் மற்றும் கோவில் அலுவலர்கள் வரவேற்றனர். பின்னர் கோவில் வாசலில் ஜனாதிபதி அவர்களுக்கு வேத மந்திரங்களுக்கிடையே பூரண கும்பத்துடன் மரியாதை அளிக்கப்பட்டது. கருப்ப கிருஹத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரைத் தரிசித்தப்பின், ஆவலுடனும் விருப்புடனும் கோவில் பிராகாரங்களை சுற்றிப் பார்த்த பிறகு கோவில் பற்றிய சரித்திர, புராண, இலக்கிய விவரங்களை ஜனாதிபதி அவர்கள் கேட்டறிந்து கொண்டார். பிறகு அவருக்கு இறைவனின் சேஷ வஸ்த்ரம் பஹுமானமாக வழங்கப்பட்டது. திருமலையிலும் திருப்பதியிலும் வழி நெடுகிலும் பொது மக்கள் கூடியிருந்து இலங்கை ஜனாதிபதி அவர்களுக்கு தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். அன்று மாலை 4 மணி அளவில் ஜனாதிபதி அவர்கள் சென்னை திரும்பினார்.

## புதிய செயலாட்சித் தலைவர்

5-11-78 அன்று, தி. தி. தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், ஐ.ஏ.எஸ்., புதிய உதவி செயலாட்சித் தலைவர் திரு. நரசிம்மா ராவ் ஆகியோருக்கு வரவேற்பும், தற்காலிகமாக தி. தி. தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராக பொறுப்பேற்று பணி புரிந்த அறநிலையத்துறையின் துணை ஆணையர் திரு. பி. ஆனந்த ராவ் முதலியார், தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவராக பணி புரிந்து, தற்போது பதவி மாற்றஞ் செய்யப்பட்டுள்ள திரு. வை. வெங்கடப்பய்யா (அரசுத்துறை அலுவலர்) ஆகியோருக்கு பிரிவு வாழ்த்துரையும் வழங்கப்பட்டன. இதனை ஒட்டி அன்று மாலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை, தி. தி. தேவஸ்தான அலுவலர் (செயலாட்சித் தலைவரின் உதவியாளர்) திரு. பி. வாசு தேவ நாயுடு அவர்கள் வரவேற்றார். தி. தி. தேவஸ்தான சட்ட அலுவலர் திரு. வீரய்ய சௌத்ரி அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார். விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஜி. சந்திரசேகரம் நாயுடு அவர்கள் தம் முறையில் தி. தி. தேவஸ்தானத்தின் நிருவாக அமைப்பினைப் பன்முகப் படுத்த வேண்டியதன் முக்கியத்துவத்தையும், தி. தி. தேவஸ்தான ஊழியர்களுக்கிடையே அலுவலர்களுக்கான பதவி உயர்வு அளிக்க வேண்டியதன் அவசியத்தையும் குறிப்பிட்டார்.

திரு. பி. ஆனந்த ராவ் முதலியார் அவர்கள் தன் பதவிக் காலத்தில் தனக்கு முழு ஆதரவையும் அளித்த தேவஸ்தான ஊழியர்களுக்கு தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டதைத் தொடர்ந்து, உதவி செயலாட்சித் தலைவராகப் பணி புரிந்த திரு. வை. வெங்கடப்பய்யா அவர்கள் பேசியபோது, அலிபிரி மற்றும் சந்திரகிரி வழியாக யாத்திரிகர்கள் திருமலைக்குச் செல்லும் படியான நடைபாதையைச் செம்மைப்படுத்தபட வேண்டும் என்றும், மேலும் பல வசதிகளை அவ்வழிகளில் மேற்கொள்ள வேண்டும் என்றும் கூறினார்.

பின்னர் தி. தி. தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் மற்றும் புதிய உதவி செயலாட்சித் தலைவர் திரு. நரசிம்மா ராவ் ஆகியோர் தங்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புரைகளுக்கு நன்றி கூறும் வகையில் உரையாற்றுகையில், தேவஸ்தான நிருவாகம் மேலும் செவ்வனே செயல்படும் வகையிலும், யாத்திரிகர்களின் நலனை மனதிற் கொண்டு செயல்படும் வகையிலும் தேவஸ்தான ஊழியர்கள் தங்கள் கடமையினை சரிவர புரிதல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தொடர்ந்து பேசுகையில் செயலாட்சித் தலைவரவர்கள் தம்முறையில் ஊழியர்களின் நியாயமான கோரிக்கைகளை மனதிற் கொண்டு மேலாண்மையும் தக்கவாறு செயல்படும் என்று ஊழியர்களுக்கு உறுதியளித்தார். இவ்விழாவில் தி. தி. தேவஸ்தான தலைமை மருத்துவ அலுவலர் திரு. ஏ. பி. ராமசந்திரா ரெட்டி அவர்களும் பங்கேற்றார். விழாவிற்கு தி. தி. தேவஸ்தான செயற் பொறியாளர் திரு. ஆர். ரங்கராஜு அவர்கள் நன்றி நவின்றார்.

---

## வருந்துகிறோம்

**தி. தி. தேவஸ்தான தலைமை மருத்துவ அலுவலர் திரு. ஏ. பி. ராமசந்திரா ரெட்டி எம். பி. பி. எஸ். அவர்கள் நியூயார்க்கில் 16-11-78 அன்று மரணம் அடைந்தார். 56 வயதான அவர், தன் உடல்நலப் பரிசோதனைக்காக அண்மையில் அவர் அமெரிக்காவுக்குச் சென்றிருந்தார். அவர் மரணத்தை ஒட்டி 17-11-78 அன்று தி. தி. தேவஸ்தானத்தின் எல்லா நிறுவனங்களும் மூடப்பட்டன. அன்னாரின் பிரிவால் துயருற்று இருக்கும் அவர் குடும்பத்தினர்க்கு 'ஸப்தகிரி' தன் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றது.**

---

★

# உறவு சொல்ல ஒருவன்

அறம் வளர்த்த ஐவரும் அஸ்தினுபுரத்திலே துரியோதனன் அவையிலே தலை குனிந்து நிற்கின்றனர். மாயச் சகுனி சூதிலே வென்று விட்டான்! விதி வென்று விட்டது!!

பாண்டவர்கள் சூதாட்டத்தில் தங்கள் சொந்த உரிமைகளையும் பொருள்களையும் இழந்து இறுதியில் திரௌபதியையும் பணயமாக வைத்து இழந்து விடுகின்றனர். இந்நிலையில் துரியோதனன் திரௌபதியை அழைத்து வா, துச்சாதனனை அனுப்புகிறான். சென்றவன் திரௌபதியை அழைத்து வருகிறான்.

பாரதியில் 'பாஞ்சாலி சபதத்திலே' பாரதியார் கூறுகிறார். ''நீண்ட கருங்குழலை நீசன் கரம் பற்றி—கரகரவென தானிழுத்தான்'' என்று. பாஞ்சாலியின் கூந்தலைப்பற்றி இழுத்து வருகின்றான் துச்சாதனன். வழிநெடுகிலும் மக்கள் நின்று 'இது என்ன கொடுமை' என்று கண் கலங்குகின்றனர்.

இவ்வாறு இழுத்து வரப்பட்ட பாஞ்சாலி துரியோதனன் அவையிலே கதறுகிறாள். மாமன் முறை சொல்ல மாமன்னர் பலர் இருந்தும், அண்ணன் முறை சொல்ல ஆயிரம் பேர் இருந்தும் வெஞ்சமரில் வெற்றிகொள்ளும் வேந்தர் ஐவர் இருந்தும் பயன் என்ன!

கர்ணன் பாஞ்சாலியின் ஆடைகளைய உத்திரவு இடுகின்றான்! பாஞ்சாலி பதறுகிறாள். உதவிக்கு யாரை அழைப்பாள். பாவம்! மாமன்மாரே, அண்ணன்மாரே, தம்பிமாரே அறம் காக்கும் ஆன்றோர்களே என்று அழைக்கிறாள். உதவி கிடைக்குமா என்று பார்க்கிறாள். உதவி கிடைக்கவில்லை. அறம் மௌனம் சாதிக்கிறது.

மங்கல நாண் பூட்டி மாலையிட்ட மணவாளா... இந்நிலை காணீரோ... என அவள் அழுகிறாள். பதில் இல்லை. அங்கும் மௌனம்.

உலக ஆதரவுகள் அனைத்தும் துறந்த நிலை. நீசன் துகில் உரிகின்றான். எஞ்சி நின்ற ஆடைகளை விட்டுவிட்டு இறைவனை சரணடைகிறாள்.

இதனை பாரதியார் அவர்கள் குறிப்பிடுகையில், ''ஹரிஹரி...ஹரிஹரி'' என்றாள். ''அபயம்... அபயம்'' உனக்கபயமென்றாள்'' என்பார். மேலும் பாஞ்சாலி ''உட்சோதியில் கலந்தாள்'' ''அன்னை ஒருமையுற்றாள் உலகை மறந்தாள்'' என்கின்றார்.

அதாவது, கீதையில் பகவான் அர்ச்சுனனிடம் கூறும் போது இதனையே அவனுக்கு நினைவூட்டுகிறார்.

'' ஸர்வ தர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ,
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷ யிஷ்யாமி மா சுச: ''

என்னை சரணடைந்து விடு. நான் எல்லாவற்றையும் கவனித்துக்கொள்கிறேன் என்பதே அதன் பொருள். இந்நிலையில் தான் பாஞ்சாலி இறைவனிடம் ஒருமையுற்ற நிலையில் தானே அவனாக மாறி அவனை அழைக்கிறாள்.

---

திரு. K. M. ஜெயராமகிருஷ்ணன்,
குமாரலிங்கம்.

---



ஸ்ரீ பத்மநாதி அம்மையப்பர் கோவில் பஞ்சமி திருவிழா-திருநாள், 4-12-78

''சம்சாரக் கடலில் சிக்கிக்கொண்ட ஒருவன், நீரில் மூழ்குபவன் செய்வது போல, தனது கரங்களை உயர்த்தி ஆண்டவனிடம் சரணாகதி அடைந்து விடவேண்டும்'' என்று இராமானுசாச்சாரியார் கூறுகின்றார்கள்.

பாஞ்சாலி பகவானைச் சரணடைந்ததும், கண்ணனின் திருவருளால் ஆடைகள் வளரத் தொடங்கின. வண்ண வண்ணச் சேலைகளாய் வளர்ந்து வந்த அவற்றை அகற்ற முடியாத துச்சாதனன் சோர்ந்து வீழ்ந்தான். கொடியரவுடைய துரியோதனன் தலை கவிழ்ந்தான்.

தந்தை, தாய், குரு, கணவன், மாமன், மாமி, தம்பி, தங்கை, அத்தை, பாட்டி, இன்னும் ஆயிரம் உறவுகள் சொல்ல அந்த அவையில் ஆயிரக்கணக்கானவர்கள் இருந்தும் ஒற்றை உறவினனாக உதவி புரிந்தவன் யார்?

பாஞ்சாலிக்கு மட்டுமல்ல, பல்லுயிரும் படைத்துக் காத்தருளும் பண்புள்ள பரந்தாமன் அவன் அல்லவா? ஆம். யாவர்க்கும் 'உறவு சொல்ல ஒருவனாக' இருப்பவன் அவன்தானே?



# ராசி பலன் (1-12-78 முதல் 31-12-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., P.D.
திருப்பதி.



## மேஷம்:

*[அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]*

ராகுவினால் கவலைகள். சனியினால் நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது தன் மக்களிடமிருந்து பிரிவு. குருவினால் உறவினர்கள் மூலம் கவலைகளுக்குள்ளாதல். சுக்ரனால் பெண்களால் துன்பங்களுக்குள்ளாதல். செவ்வாயினால் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். புதனால் பண வரவு, வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள். சூரியனால் உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மனயமைதியின்மை.



## ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினால் கருத்து வேறுபாடுகள். சனியினால் பண நஷ்டம் அல்லது நட்பு முறிவு அல்லது உற்றார் உறவினர்களுடன் பிரிவு. குருவினால் ஏமாற்றங்கள். சுக்ரனால் உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். புதனால் கருத்து வேறுபாடுகள். செவ்வாயினால் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல். சூரியனால் உடல் நலம் கெடல் அல்லது பிரயாணம்.



## மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

ராகுவினால் பண வரவு. சனியினால் உடல்நல மேன்மை, வாகன வாய்ப்பு, குடும்பத்தில் மகிழ்ச்சி. குருவினால் பணவரவு, எதிரிகளை வெற்றிகொளல். சுக்ரனால் புதிய உறவுகள், பெரியோர்களால் பாராட்டப் படல், பணவரவு, புதிய நண்பர்கள் மற்றும் மக்கட்பேறு. புதனால் வெற்றி அல்லது பதவி உயர்வு. செவ்வாயினால் மனைவியுடன் மன வேற்றுமை அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதிப்படல். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல்நல மேன்மை, எதிரிகளை வெற்றி கொளல் இறுதி 15 நாட்களின்போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல்.



## கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினாலும் சனியினாலும் பண நஷ்டம் மற்றும் மகிழ்ச்சியின்மை. குருவினால் கருத்து வேறுபாடுகள் அல்லது பொருள் நஷடம் அல்லது அலுவலகக் கவலைகள். சுக்ரனால் புதிய நல்ல நட்புறவுகள், புதிய உற்சாகம். புதனால் மனைவி அல்லது தன் மக்களுடன் கருத்து வேறுபாடு கொள்ளுதல். செவ்வாயினால் உடல்நல மேன்மை, வெற்றி மற்றும் பணவரவு. சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல் ஆனால் இறுதி 15 நாட்களின்போது உடல்நல மேன்மை மற்றும் எதிரிகளை வெற்றி கொளல்.



## சிம்மம்:

*[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].*

ராகுவினாலும் சனியினாலும் கெடுதிகள் ஏற்படல். குறிப்பாக சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு. குருவினால் பிரயாணமும், உடல் நலம் கெடலும். சுக்ரனால் பண வரவு, மதிப்புயர்தல், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல், எதிரிகளை வெற்றி கொளல். புதனால் பண வரவு, குடும்பத்தில் மகிழ்ச்சி. செவ்வாயினால் உடல் நலம் பாதிக்கப்படல், பிள்ளைகளால் அல்லது எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல். சூரியனாலும் உடல் நலம் பாதிக்கப்படல்.



## கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

ராகுவினால் பண நஷ்டம். சனியினால் கவலைகள். குருவினால் பண வரவு. சுக்ரனால் பொருள் வரவு அல்லது தானிய வகைகள் கிடைக்கப் பெறல், மதிப்புயர்தல் அல்லது மக்கட்பேறு. புதனால் புதிய நண்பர்கள், ஆனால் தனக்குத் தானே ஆபத்தாக விளங்குதல். செவ்வாயினால் வயிற்றுக் கோளாறினால் உடல் நலம் கெடல் அல்லது தீயவர்களால் கெடுதிகளுக்குள்ளாதல். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண வரவு அல்லது தன்னிலை உயர்தல் ஆனால் இறுதியில் உடல்நலம் கெடல்.



## துலா:

*[சித்துரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]*

ரா குவினால் மகிழ்ச்சி, சனியினால் பண வரவு மற்றும் கேளிக்கைகளுக் குள்ளாதல். குருவினால் பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல். சுக்ரனால் குடும்பத்தில் மகிழ்ச்சி. புதனால் பண வரவு ஆனால் இகழ்ச்சிக்குள்ளாதல். செவ்வாயினால் பிள்ளைகள் மூலம் அல்லது தவறான வழியில் பண வரவு: சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட் களின்போது கண் சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல் அல்லது ஏமாற் றப்படல் அல்லது பண நஷ்டம் ஆனால் இறுதி 15 நாட்களின்போது பண வரவு மற்றும் மதிப்புயர்தல்.



### விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனு ஷம் கேட்டை முடிய]

ராகுவினால் கருத்து வேறுபாடுகள். சனியினால் பண நஷ்டம் அல்லது மதிப்புக்குறைதல். குருவினால் பண வரவு, வெற்றி அல்லது தானிய வகை கள் கிடைக்கப் பெறல் அல்லது மக் கட்பேறு. சுக்ரனாலும் பொருள் வரவு. புதனால் தவறான ஆலோசனைகளைக் கேட்டதன் விளைவாக பொருள் நஷ் டம், கருத்து வேறுபாடுகள். செவ் வாயினால் அலுவலகக் கவலைகள் அல்லது உடல்நலம் பாதிக்கப்படல் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிற்று கோளாறினால் உடல்நலம் கெடல் இறுதி 15 நாட்களின்போது ஏமாற் றப்படல், பண நஷ்டம்.



### தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

ராகுவினால் தீய நடவடிக்கைகளை மேற்கொளல். சனியினால் கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம் கெடல், அல்லது தீய நடவடிக்கை களுக்குள்ளாதல். குருவினால் பிர யாணம் அல்லது உடல்நலம் பாதிப்பு. சுக்ரனால் பண வரவு அல்லது நல்ல நண்பர்கள். புதனால் இகழ்ச்சிக்குள் ளாதல் அல்லது உடல்நலமின்மை. செவ்வாயினால் தீயவை நடைபெறல். சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட் களின்போது கெடுதிகள் ஏற்படல் இறுதி 15 நாட்களின்போது பிர யாணம் அல்லது உடல் நலம் பாதிக் கப்படல் அல்லது பண நஷ்டம்.



### மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திரு வோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

ராகுவினால் கவலைகள். சனியினால் உற்றார் உறவினருடன் பிரிவு. குரு வினால் பண வரவு மற்றும் குடும்பத் தில் மகிழ்ச்சி. சுக்ரனால் இகழ்ச்சிக் குள்ளாதல், கருத்து வேறுபாடுகளுக் குள்ளாதல். புதனால் பண வரவு, நல்ல நண்பர்கள், அல்லது வாகன வாய்ப்பு அல்லது குழந்தைப் பேறு. செவ்வாயினால் அதிக அளவு பொருள் நஷ்டம் அல்லது மனைவிக்கு மன யமைதியின்மை அல்லது கண் சம்பந் தப்பட்ட நோயினால் அவதியுறல். சூரி யனால் மாதத்தின் முதல் 15 நாட் களின்போது பண வரவு, மதிப்புயர் தல் ஆனால் இறுதி 15 நாட்களின் போது கெடுதிகள் ஏற்படல்.



### கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதை யம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]

ராகுவினால் கருத்து வேறுபாடுகள். சனியினால் பிரயாணம். குருவினால் மனயமைதி பறிபோதல். சுக்ரனால் பண வரவு அல்லது கேளிக்கைகளுக் குள்ளாதல். புதனால், பண வரவு, மற்றும் வெற்றி. செவ்வாயினால் வெற்றி. சூரியனால் வெற்றி, மதிப் புயர்தல், பொருள் வரவு, உடல்நல மேன்மை.



### மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி, ரேவதி முடிய].

ராகுவினால் பண வரவு. சனியினால் வெற்றி மற்றும் உடல்நல மேன்மை. குருவினால் பணவரவு, அல்லது வாகன வாய்ப்பு அல்லது புதிய ஆடை ஆபர ணங்கள் அல்லது குழந்தைப் பேறு. சுக்ரனால் புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வீடு வாய்ப்பு. புதனால் நன் முயற்சிகளுக்கு தடைகள் ஏற்படல். செவ்வாயினால் அதிக பொருள் வரவு. சூரியனால் மாதத்தின் முதல் 15 நாட் களின்போது ஏமாற்றங்கள் அல்லது பொருள் நஷ்டம் அல்லது உடல்நலம் கெடல். ஆனால் இறுதி 15 நாட்களின் போது எல்லா வகைகளிலும் வெற்றி கிடைக்கப் பெறல்.



---

சில தவிர்க்க முடியாத காரணங்கள் முன்னிட்டு 'முக்கவி கண்ட காப்பியம்' எனும் தொடர் கட்டுரையினை இம் மாத இதழில் வெளியிட முடியவில்லை.

(ஆ-ர்.)

---

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba rao, m.a. and Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T. T. D. Press, Tirupati. 517501




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்)பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துளை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

திருப்பதிக்கு... ...வருகை புரியுங்கள்



ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயிலின்

# தெப்போற்சவம்

[9-1-79 முதல் 11-1-79 வரை]